# கல்கி

ஃபிட்டா...ஃபைனா...ஃமார்ட்டா...




KALKI • 15.06.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

சிக்கலில் சூப்பர் ஸ்டார்...

# ரஜினிக்குத் தகுதி உண்டா?

- வெடிக்கும் 'சிலபஸ்' சர்ச்சை!

# கல்கி

15.6.2008

எது எது எங்கே? பட்டியல் இங்கே...






அபலைகள் - அமரர் கல்கி சிறுகதை • 34

14 • தலையங்கம்

ரஜினிக்குத் தகுதி உண்டா? - வெடிக்கும் 'சிலபஸ்' சர்ச்சை • 6

90 • கட்சிகளைக் கடந்து...

தராசு பதில்கள் • 81

2 • விசாலி மனோகரன் - நேர்காணல்

கிரேஸி • 10

20 • கண்ணனைத் தேடி - ஆன்மிகத் தொடர்



# புதிய

**நீண்ட இடைவெளிக்குப் பிறகு, சினிமாவுக்குப் பாட்டு எழுத வந்திருக்கும் கவியரசு கண்ணதாசனின் மகள் விசாலி மனோகரனோடு நேர் காணல்...**

***இத்தனை நாள் ஏன் இந்த இடைவெளி?***

இடைவெளி என்பது நான் நிச்சயித்ததல்ல, அது காலத்தின் கோட்பாடு. ஜாதகத்தையும், கால நேரத்தையும் நான் அதிகம் நம்புகிறேன்.

***கண்ணதாசனைத் தவிர்த்து விட்டு விஷாலி யார்...?***

கண்ணதாசனை முதலில் விஷாலி ஏன் தவிர்க்க வேண்டும். இதுதான் நான் என்று ஆனபின், இதன் வழிச்சாலையில்தானே என் வாகனம் ஓடும். பெட்ரோல் இல்லாது போனால், வண்டி என்ன வாகும்? பெட்டி இல்லாது போனால் பணத்தை எங்கே வைக்க வேண்டும்? என்பதையெல்லாம் தீர்மானிப்பது அவன் வேலை என்று விட்டுவிட்டு, ஆனதைச் செய்வது தான் அறிவுக்கு அழகு.

***இன்றைய குத்துப்பாட்டு பற்றி...?***

கனியை விட்டு, காய் கவர்ந்து நிற்பது சைவனுக்கு அழகல்ல.

***'தனம்' திரைப்படத்துக்குப் பாடல் எழுத, இளையராஜா உங்களை அழைத்தது ஏன்?***

தனம் தரும் கல்வி தரும் ஒருநாளும் தளர்வறியா மனம் தரும் அம்மையின் அன்பை நேசிப்பவளாதலால், அவள் இந்த தனம் தந்திருப்பாள். சந்திக்கவெல்லாம் நான் நினைப்பதே இல்லை. ஆனால், இளையராஜாவிடம் ஒரு சக்தி எனை இட்டுச் சென்று சேர்த்தது என்பதை மறுப்பதற்கில்லை. அப்படியே பேசிக் கொண்டிருக்கையில், 'எழுது... உனக்கு நன்றாக வரிகள் வரும்' என்று எழுத வைத்தது அவரது அன்புக்குரிய கண்டுபிடிப்பு. நான் மதிக்கும் வெகு சிலரில் முதன்மையானவர் அவர்.

***கவியரசர் கண்ணதாசனை இளைய தலைமுறைகளிடம் கொண்டு செல்லும் முயற்சி என்ன?***

நிச்சயமாய் தமிழ், ஆன்மிகம், சமுதாயப்பணி மூன்றையும் பிசைந்து உருவாக்கிய ஒரு பெரும் பொறுப்பு, என் தோளில் ஏறியமரும். அதை நிகழ்த்தும் வல்லமையில் தனிக்காட்டு ராணியாய் நிற்பேன். இது தெய்வ நியதி. அப்பாவின் ஆன்மா, அதனை உலகுக்கு உயர்த்திக் காட்டும்.

***கவியரசரை உங்கள் குழந்தைகள்***

எப்படிப் பார்க்கிறார்கள்?

மகன் விஷ்வாக்... அவனையே நான் கண்ண தாசனாகத்தான் பார்க்கிறேன். பயங்கர தமிழ் ஞானம். பார்க்கலாம்... தாத்தா எப்படி மீண்டும் பேரனில் உயிர்த்தெழப் போகிறார் என்று.

**பல்வேறு துறைகளில் சாதனை புரியும் பெண்கள், ஏன் படைப்பிலக்கியத்துக்கு வரு வதற்கு அதிக ஆர்வம் காட்டுவதில்லை?**

பெண்ணே ஒரு படைப்பிலக்கியம்தான். அவள் வேறு உள்ளே வந்து ஆணின் தொழிலைப் பிடுங்க வேண்டுமா...? வரும்போது வரட்டும். விடுங் களேன்.

**பெண் சுதந்திரம் பற்றி...**

உபயோகமற்ற பேச்சு இது. உண்மையான பெண், தன் சுதந்திரத்தைத் தனக்கு விதிக்கப்பட்ட சட்டதிட்டங்களுக்குள்ளேயே சரியாக வரையறுத்து விடுவாள். அதற்குமேல் அவளிடம் பேச்சே இருக் காது. ஆனால், இன்று பல இடங்களில் 'சக்தி' களெல்லாம் அழுத்தம் குறைந்ததால், 'சகதி'களாகி விட்டதாய் வருந்துகிறேன்.

**இன்றைய பாடலாசிரியர்கள் பற்றி...?**

நன்றாகப் பணம் சம்பாதிக்கிறார்களாமே... கேள்

# பிரவேசம்

விப்பட்டேன். பரவாயில்லை... இன்னும் நன்றாகச் சம்பாதிக்க என் வாழ்த்துகள்.

**இன்றைய தினத்தில் பிரபலங்களின் வாரிசுகள், அனைத்து துறைகளிலும் ஆதிக்கம் செலுத்து கிறார்கள். கவியரசரின் வாரிசாக இதை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

ஒரே வார்த்தை, 'ப்ராரப்தம்.'

**இன்றைய தினத்தில், நிறைய பேர் கவியரசர், கவிப்பேரரசு கவிக்கோ, என்றெல்லாம் பட்டம் சூட்டப் பெற்றிருக்கிறார்களே?**

''கண்ணதாசன் போன்ற குழந்தைகளுக்கு, தெய்வமே நேரில் வந்து பேர் சூட்டுகிறான், ஏனைய கவிக் குழந்தைகளுக்குப் பேர் வைப்பது கற்றியிருக்கும் சொந்தக்காரர்கள்... அவ்வளவுதான்.''

**கவியரசருக்கு கண்ணன், உங்களுக்கு...**

'சிவன்'.

**– ராகவ்குமார்**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் :
044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.




முருகன்

இந்த வாரம் நிச்சயமா, காஃபி ஷாப்ல ஆண்களோட அடுக்கடுக்கான கருத்துகள்தான்... (போன வாரம் முழுக்க முழுக்க பொண்ணுங்க ஃபோட்டோவா இருந்துச்சேன்னு ஆதங்கப்பட்ட இளங்காளையர்களுக்குக் கொஞ்சம் ஆறுதல் வேண்டாமா...!)

ஷாப்ல இன்னைக்கு கனவு பற்றி நம்ம பசங்க பக்கம் பக்கமா பேசினதைச் சுருக்கி பாய்ன்ட் பாய்ன்டா கொடுக்கப் போறோம்...

ப்ளாக் அண்ட் ஒயிட் கனவு, ஈஸ்ட்மென் கலர் கனவு... இப்படி எந்த மாதிரி கனவா இருந்தாலும் சொல்லுங்கன்னு சொன்னதும், எல்லோரோட முகத்துலயும் ஆயிரம் வாட்ஸ் புன்னகை!

முதல்ல... பிலவேந்திரன் என்ன சொல்றார்ன்னு பார்ப்போம்...

- என் கனவுல பெரும்பாலும் தெரிஞ்சவங்கதான் வர்றாங்க. *(சண்முகா! அவங்க ஆணா...? பெண்ணா...?)* எந்தக் கனவாக இருந்தாலும் கடைசியா திடீர்னு ஒரு சத்தம் வரும். என்னான்னு பார்த்தா, கட்டில்ல இருந்து கீழே விழுந்து கிடப்பேன்... *(மாடியில போயெல்லாம் படுத்துடாதீங்க.)*

- யார்கூடவாவது சண்டை போட்டா, அவங்களும் கனவுல வந்துடறாங்க. அப்புறம் என்ன... அவங்களப் பின்னிப் பெடல் எடுத்துடுவேன்... கனவுலதான்!

இது ரொம்ப 'ஓவர்' பிலவேந்திரன்! இதோட நிறுத்திக்குவோம். முருகன் என்ன சொல்றார்ன்னு கேட்போம்.

- 'கனவு வரும்... ஆனா வராது' அதாவது மறுபடி சொல்றதுக்கு ஞாபகத்துக்கு வராது. *(நைட்ல அடிக்கடி வடிவேலு காமெடி பாக்கறீங்கன்னு தெரியுது!)*

- பகல் 12 மணி இருக்கும் சார். ஒரு பெரிய வீட்டுக்குள்ள போறேன்; யாருமே அங்க இல்லை; எனக்குப் பிடிச்ச குலாப் ஜாமூன் அந்த வீட்டுல இருந்துச்சு. ஒரு வாய் பார்த்துட வேண்டியதுதான்னு கிட்டப் போனா... 'டேய் மாப்ளே'னு ஃப்ரெண்ட் சதீஷ் சத்தம் போட்டான்; அவ்வளவுதான் குலாப்ஜாமூன் கனவு குளோப்ஸ் ஆயிடுச்சு! *(சரியான சாப்பாட்டு ஜாமன், சே ராமன், முருகன்...)*



பிலவேந்திரன்

முருகனுக்கப்புறம் வர்ற அருணாச்சலம் என்ன சொல்லப் போறார்ன்னு தெரியலியே...




**கண்ணில்லேன்னாகூட கனவு உதிக்கும். கனவு இல்லேன்னா வாழ்க்கை இனிக்குமா?**



அருணாசலம்

● சொன்னா சிரிக்கக்கூடாது... (நீங்க இன்னும் சொல்லவே இல்லையே?) அப்பப்ப என் கனவுல டான்ஸ் ஆடுற பிள்ளையார் சிலை வருது. (இதுகூடத் தெரியலயா? பையனோட டான்ஸ ரசிக்கத் தெரியல. அவருக்கு அப்பா நீங்க தானே 'அருணாச்சலம்!')

● சின்னப்பையனா இருக்கும்போது 'விளம்பரம்' மாதிரி குட்டிக் குட்டிக் கனவா வரும். இப்பவெல்லாம் பத்து பக்கம் அளவுல கனவு வருது. (வேணாம் விட்டுடுங்க! டீ.வி. சீரியல் எடுக்கப் போங்க!)

# கனவு அறுவடை!

● சில கனவு பத்தியெல்லாம் வெளிய சொல்ல முடியாது சார்... இனிப்பு, காரம், நிடம், சுவை கலந்து இருக்கும். (மிட்நைட் மசாலாவா...?)

அருணாச்சலம்தான் கொஞ்சம் வெளிப்படையா பேசியிருக்காரு. முடிவா, முருகன் என்ன சொல்றார்னு கேட்டுடுவோம்.

● 'நினைத்தேன் வந்தாய்' மாதிரி யாராவது கனவுக்கன்னி, அட்லீஸ்ட் கனவுலயாவது வருவாங்கன்னு பார்த்தா... ம்ஹூம்... இதுவரைக்கும் இல்ல! (நினைப்புதான்!) எல்லாம் 'ஓல்டு'களாக் கனவுல வந்து டார்ச்சர் பண்ணுது.



வேல்முருகன்

(ஓ.கே... கூல் முருகன்!) பார்த்தீங்களா... நம்ம பசங்களோட கனவு உலகத்த! பகல் கனவு பலிக்காதுன்னு சொல்வாங்க... பலிக்குதோ பலிக்கலியோ, பதினாலு ரீலு அளவுக்குக் கனவு கண்டுக்கிட்டே இருப்போம்!

**– எம்.திரவிய முருகன்**



Mr.மக் மொழி

தூங்கலேனா தொந்தரவு தெரிஞ்சுக்கோ ஸ்வீட் ட்ரீம்ஸுக்கு சர்க்கரையைச் சேர்த்துக்கோ!

## சிக்கலில் சூப்பர் ஸ்டார்...

# ரஜினிக்குத் தகுதி உண்டா?

அண்மையில் பலரையும் புருவம் உயர்த்த வைத்தது பத்திரிகையில் வந்த அந்தச் செய்தி. CBSE எனப்படும் மத்தியப் பாடத் திட்டத்தில், தமிழகத்தின் உச்ச சினிமா நட்சத்திரமான ரஜினிகாந்தின் வாழ்க்கைச் செய்தி ஒன்று பாடமாக வைக்கப்பட்டுள்ளது. சூப்பர் ஸ்டார் ஒரு காலத்தில் பஸ் கண்டக்டராகப் பணியாற்றினார் என்பது, உழைப்பின் கௌரவத்துக்கு உதாரணமாக்கப்பட்டிருக்கிறது. மத்திய அரசின் இந்த முயற்சி சரிதானா? பலரையும் சந்தித்துப் பேசினோம்...

**வரலட்சுமி (கல்லூரி மாணவி) :**
ரஜினிகாந்த், சினிமாத் துறையில் சாதனை புரிந்த நடிகர் என்பதில் சந்தேகமில்லை. அவரின் வாழ்க்கையை சினிமாவில் முன்னேறத் துடிக்கும் ஓர் இளைஞன் வேண்டுமானால் முன்னுதாரணமாகக் கருதலாம். சினிமாவை ஒரு பொழுது போக்காக மட்டுமே உணரும் ஒரு குழந்தைக்கு, சினிமாதான் எல்லாம் என்னும் தவறான வழிகாட்டலே இந்த முயற்சி. இது உடனடியாகச் சீர்செய்யப்பட வேண்டுமென்பதில் மாற்றுக் கருத்தில்லை.



* வரலட்சுமி

**க.ப.அறவாணன் (கல்வியாளர்):**
1960க்கு முன் அரசியலுக்கும் சினிமாவுக்கும் தொடர்பே இருந்ததில்லை. 1960க்குப் பின் இரண்டும் நெருக்கமாயின.

1970க்குப் பிறகு இரண்டும் ஒன்றாகிவிட்டன. இன்றைய நடிகர்களின் அரசியல் எழுச்சி, அதனை ஊர்ஜிதப்படுத்துகிறது. சேவை, தியாகம் எல்லாம் பின்னுக்குப் போய், புகழ் மட்டும் இருந்தாலே பெரிய பதவிக்கு வந்துவிட முடியுமென்கிற அபாயப் போக்கு தமிழகத்தில் நிலவி வருவது, வெட்கப்பட வேண்டிய செயல். இந்நிலையில் இது மாதிரி எல்லாம்தான் நிகழும்! எதிர்கால சமுதாயத்தை ஆக்கபூர்வமான பாதைக்கு அழைத்துச் செல்லாமல், இப்படியெல்லாம் நடந்து கொண்டிருந்தால், ஒரு சமூகம் உச்சபட்ச வீழ்ச்சியைச் சந்திக்கும். அதற்கு நாமே காரணமாவது கொடுமை!


* ஞாநி

**அலமேலு (குடும்பத் தலைவி):**

நன்றாக மக்களை வாழ வைப்பார்கள் என்று நம்பித்தான் வோட்டு போடுகிறோம். ஆனால், அவர்கள் நமக்குத் திருப்பித் தருவதெல்லாம் இதுபோன்ற அவலங்களைத்தான். கேட்கவே வேதனையாக இருக்கிறது! எங்கள் பிள்ளைகளின் எதிர்காலம் ரஜினிகாந்திலேயே தங்கிப் போகவா பணம் கொட்டிப் படிக்க வைக்கிறோம்? எங்கே நிகழ்ந்த விபத்து? இதற்கு யார் காரணம்? ஒன்று மட்டும் நிச்சயம். இந்தச் செய்திகேட்டு கட்டாயம் ரஜினிகாந்தே வருத்தப்பட்டிருப்பார்!


* சி.மகேந்திரன்

**பழனி (சேர்மன், ஆல்ஃபா கல்வி ஆராய்ச்சி அறக்கட்டளை):**

ஏன் இப்படி ஆகிவிட்டது CBSE பாடத் திட்டம்? ஆராய்ந்துதான் செய்தார்களா? ஏற்கெனவே சினிமா மோகத்தில் கட்டுண்டு கிடக்கும் சமுதாயத்தை, இன்னும் சீரழிக்கவா இந்தச் செயல் திட்டம்? தங்கள் குழந்தைகளும் படிக்கும்போது இதை எப்படி உள்வாங்கி, என்னவாக வெளிப்படுத்துவார்கள்? பொழுது போக்கு, கேளிக்கை, சினிமா எல்லாம் ஒரு நாட்டின் பின்னணியில் இருக்கவேண்டுமே தவிர, அதையே முன்னணிக்குக் கொண்டு வந்து, மாணவர்களுக்கு மூளைச் சலவை செய்வதென்பது மிகவும் அபாயமானது. ஒரு சமுதாயமே இதனால் பாதிக்கப்படக்கூடிய நிலை உண்டாகிவிடும். சினிமா என்பதே ஒரு மாயை என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, மாயையை எதற்கு மடியில் கட்டிக்கொள்ள வேண்டும்?

**ஜெயபாஸ்கரன் (சமூகவியலாளர்):**

இது கடைந்தெடுத்த பித்துக்குளித்தனம். சினிமாதான் எல்லாம் என்று பதிய வைக்கும் முயற்சியாகத்தான் இது தெரிகிறது. நாட்டுக்காகப் பாடுபட்ட தலைவர்கள், அவர்கள்தம் அரும்பணிகள் எல்லாவற்றையும் குழி தோண்டிப் புதைக்கும் மூடத்தனம். இதன் பின்னணி குறித்து உடனே விசாரணைக்கு உத்தரவிட வேண்டும். இந்தப் பாடத்தால், பள்ளிக் குழந்தைகள் தெரிந்து கொள்ளக்கூடிய தகவல் ஏதுமில்லை. ரஜினி, நாட்டு

**பள்ளிக்கூட பாடப் புத்தகங்களில் சினிமாவே கூடாது என்கிற எதிர்ப்பில் எனக்கு உடன்பாடில்லை. பள்ளிகளில் சினிமாவை ஒழுங்காகக் கற்றுத்தர வேண்டும்.**

## - வெடிக்கும் 'சிலபஸ்' சர்ச்சை!



நலப் பணிகளில் பங்கேற்றாரா? உடன்கட்டை போன்ற மூடப் பழக்கங்களை ஒழிக்க முற்பட்டாரா? சமூக வாழ்வுக்குத் தேவையான முன்னேற்றங்களுக்கு முன் வந்து நின்றாரா? தனி மனித வாழ்வின் மேம்பாட்டுக்கு உதவி புரிந்தாரா? எதுவுமே செய்யாமல் ஒரு புகழ்பெற்ற நடிகராக மட்டுமே தம்மை முன்னிறுத்தி, 'வாழ்க்கையில் பணத்தை அதிகம் சேர்க்காதே' என்று படங்களில் அதிகம் பேசிவிட்டு, நிஜ வாழ்வில் கோடி கோடியாகச் சேர்த்து வைத்துக்கொண்டிருப்பவர்தானே இந்த ரஜினிகாந்த்! தமது சொந்த ஆர்வத்தால், உந்தப்பட்டு நடிகரானவர் இவர். இதில் அடுத்தவருக்கு முன் மாதிரியாகத் திகழும் மேன்மை எங்கிருந்து வந்தது? இலவச மருத்துவமனை, இலவச திருமண மண்டபம், இலவச பள்ளி என்று எதையாவது இவரால் செய்ய முடிந்ததா? எத்தனையோ பல அருஞ்சாதனையாளர்கள் நமது திரைத்துறையில் இருக்க, ரஜினிகாந்தின் வாழ்க்கை வரலாற்றைப் படிப்பிக்க வேண்டிய அவசியம் என்ன?

**கோபால் (+2 மாணவன்):**

ரஜினிகாந்த் ஒரு கமர்ஷியல் ஆக்டர்; மாணவர்களின் ஹீரோ அல்ல. அது ஒரு அப்துல் கலாமாகவோ, சர்.சி.வி.ராமனாகவோ, ஐன்ஸ்டீனாகவோதான் இருக்க முடியும்; இருக்க வேண்டும். இந்தத் தவறைத் தெரிந்தே செய்திருக்கிறார்கள். மாணவர்களின் எதிர்கால நல்வாழ்வைக் கருத்தில் கொண்டு, அரசு இந்த விஷயத்தில் கவனம் செலுத்தவேண்டும்.

**சி.மகேந்திரன் (மாநில துணைச் செயலாளர், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி)**

இது ஒரு தவறான முன்னுதாரணம். காந்தி முதல், வாழும் இன்றைய தலைவர்கள் வரை உதாரணம் காட்ட ஓராயிரம் பேர் நம்மிடம் இருக்க, ரஜினிகாந்த் எதற்கு? தன்னம்பிக்கை, நாட்டுப்பற்று, கட்டுப்பாடு என்று எடுத்துக்கொண்டால் கூட, ரஜினியிடம் கற்றுக்கொள்ள விஷயங்கள் அதிகமில்லை. கல்வித் துறையில் மலிந்துவிட்ட வீழ்ச்சியையே இது எடுத்துக்காட்டுகிறது. மக்களின் மன உணர்வுகளைப் புண்படுத்தும் இந்தப் பின்னடைவைக் கொண்டு வந்திருக்கிற மத்திய



★ தங்கம் தென்னரசு

இந்தப் பிரச்னை குறித்து தமிழகப் பள்ளி கல்வித் துறை அமைச்சர் தங்கம் தென்னரசுவிடம் பேசினோம்:

''பொதுவாக, ஒரு பாடத் திட்டத்தை உருவாக்குவது என்பது, தனி நபர் சம்பந்தப்பட்ட விஷயம் அல்ல. ஆசிரியர்கள், கல்வியாளர்கள், பேராசிரியர்கள் என வல்லுநர் குழு ஆராய்ந்து, ஒருவருடைய வாழ்க்கை வரலாற்றைப் பாடமாக வைக்கலாமா... வேண்டாமா எனத் தீர்மானிப்பார்கள். அப்படி அவர்கள் ஆராயும் போது, ரஜினியின் வாழ்க்கை வரலாற்றைப் பாடமாக வைக்கலாம் என்று முடிவு செய்திருக்கலாம். அதுவும் சி.பி.எஸ்.இ. பாடத் திட்டம் என்பது மத்திய அரசின் கீழ் இயங்குவதால், அது பற்றி நானோ, தமிழக கல்வி அமைச்சகமோ முழுமையான கருத்தை

பாடத் திட்டக் குழுவை, மத்திய அரசை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி வன்மையாகக் கண்டிக்கிறது. ரஜினிகாந்த் பகுதியை, பாடத் திட்டத்திலிருந்து நீக்கும் வரை தொடர்ச்சியான போராட்டங்கள் நிகழ்த்தவும் ஆலோசித்து வருகிறோம்.

**ஞாநி (பத்திரிகையாளர்):**

பள்ளிக்கூட பாடப் புத்தகங்களில் சினிமாவே கூடாது என்று கண்மூடித்தனமாக எதிர்த்தால், அந்த எதிர்ப்பில் எனக்கு உடன்பாடில்லை. பள்ளிகளில் சினிமாவை ஒழுங்காகக் கற்றுத்தர வேண்டும் என்று நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். நடிகரின் வரலாற்றை ஆதியில் ஆரம்பித்து, அவர் பட்ட சிரமங்களைச் சொல்லி, உழைப்பும் தன்னம்பிக்கையும் ஒரு மனிதனுக்கு எவ்வளவு முக்கியம் என்பதை உணர்த்த வைப்பதிலும் தவறிருக்க முடியாது. ஒரு காந்தி மாதிரி, ரூஸ்வெல்ட் மாதிரி நடிகன் கடந்து வந்த கடின பாதைகள் மாணவர்களுக்குப் பாடம்தான். ஆனால், அது எந்த நடிகர் என்பது முக்கியம்! தமிழ் சினிமாவை அடுத்த கட்டத்துக்குக் கொண்டு சென்றதில், இயக்குநர் ஸ்ரீதர், நடிகர் சிவாஜி கணேசனுக்குப் பெரும் பங்குண்டு. இவர்களின் வாழ்க்கை வரலாற்றை வெளியிடும் பட்சத்தில், அதில் தவறிருக்க முடியாது. அது ரஜினிகாந்த் என்னும்போதுதான் பிரச்னை. ரஜினி காந்த், தமிழ் சினிமாவின் மறுமலர்ச்சிக்கு வித்திட்ட சாதனையாளரல்ல; வெற்றிகரமான ஒரு நடிகர், அவ்வளவுதான். எனவே, தவறான செய்கையாகத்தான் இந்தப் பாடத்திட்டம் எனக்குப் படுகிறது.



✱ அலமேலு

இந்தச் சர்ச்சை குறித்து ரஜினி தரப்பில் கருத்தறிய, தொடர்பு கொண்டோம். 'வீட்டில் யாருமே இல்லை. எல்லோருமே வெளியூர் சென்றிருக்கிறார்கள்' என்று கூறப்பட்டது. இந்த இதழ் அச்சாகும் வரை அவர்களிடமிருந்து எந்தவித பதிலும் நமக்குக் கிடைக்கவில்லை.

**– மு.மாறன்**

***வெளியிட இயலாது'' என்றவரிடம், 'மாநில பாடத்திட்டத்தில் இது போன்ற செயல்கள் எதிர்காலத்தில், வருமா?' என்றதற்கு, ''அப்போது கூட நானோ, கல்வி அமைச்சகமோ மட்டும் முடிவெடுக்காமல் கல்வியாளர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், வல்லுநர்கள் குழுவுடன் ஆலோசித்து, யாருடைய வாழ்க்கை வரலாறு மாணவ சமுதாயத்துக்குப் பலனளிக்கும் என்பதை ஆராய்ந்துதான் பாடத் திட்டம் வகுக்கப்படும்'' என்றார்.***

*இது குறித்து வாசகர்கள் தங்களது கருத்துகளை எமக்கு கடிதமாக எழுதும்படி கேட்டுக் கொள்கிறோம்!*

*(ஆர்.)*

**...இப்படியெல்லாம் நடந்துகொண்டிருந்தால் ஒரு சமூகம் உச்சபட்ச வீழ்ச்சியைச் சந்திக்கும். அதற்கு நாமே காரணமாவது கொடுமை!**



✱ கூடலழகன்



✱ ஜெயபாலகரன்

● ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்

***ஒரே சமயத்தில் உங்களை அசின், நமீதா, த்ரிஷா மூவரும் காஃபி குடிக்க அழைத்தால், யார் வீட்டுக்குச் செல்வீர்கள்...?***

என் மருமகனுக்கு அசினைப் பிடிக்கும். என் முதல் மகனுக்கு நமீதாவைப் பிடிக்கும். என் இரண்டாவது மகனுக்கு த்ரிஷாவைப் பிடிக்கும். எனக்கு என் மனைவி கையால் கலந்த காஃபிதான் பிடிக்கும். எனவே அவர்கள் மூவரையும் காஃபி குடிக்க என் வீட்டுக்கு அழைப்பேன்... ''காஃபி டைம் வித் க்ரேஸி...!''

● த.புகழேந்தி, கூகூர் கிராமம்

***கணவன் பேச்சைக் கேட்காத மனைவியை எப்படிச் சமாளிப்பது...?***

'பேச்சைக்' கேட்காத மனைவியிடம் 'பேச்சிலராக' இருங்கள்!

● ரா.பிரசன்னா, மதுரை

***ஏன் தண்ணீர் மட்டும் திகட்டுவதேயில்லை?***

தெய்வத்தைப் போல தண்ணீரும் ஒரு தத்துவமே... முக்குணங்களைக் கடந்த நிர்குண பிரம்மமாக கடவுளை உபாசித்து, அதற்கு தொண்டை ஆற்றினால், நமது ஆத்மாவின் தாகம் தீரும். அதேபோல் நிறம், மணம், சுவையற்ற தண்ணீர் நமது தொண்டையை ஆற்றி, தாகத்தைத் தீர்க்கும். தீராத தாகம் கொண்டோர்க்கு, தெய்வம் - தண்ணீர் இரண்டுமே திகட்டாத பானம்... அதனால்தான் ஆழ்வார்கள், திகட்டாத பெருமானை 'ஆரா அமுதே' என்று தாகத்தோடு அழைத்தார்கள். கொசுறாக, நாம் தாமரை இலைத் தண்ணீராக இருந்தால் வாழ்க்கை திகட்டாது.

● ரம்யா, சிதம்பரம்

***அறிவில்லாத மனிதனை மிருகம் என்று சொல்லலாமா...?***

அன்பில்லாத மனிதன்தான் மிருகம். அறிவில்லாத மனிதன் மடச் சாம்'பிராணி'!

● காயத்ரி நவீன், பெங்களூர்

***நடிகர் நாகேஷின் நகைச்சுவையில் ப்ளஸ் பாய்ண்ட் என்ன?***

மேடம்... நகைச்சுவைக்கே ப்ளஸ் பாய்ண்ட் நாகேஷ்தான்.

● ஜி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

***கணவன் போடும் தாலியின் மூன்று முடிச்சுக்கும், மனைவி போடும் முந்தானை முடிச்சுக்கும் என்ன வித்தியாசம்?***

'முற்பகல் தாலி முடித்திடின் பிற்பகல் முந்தானை போடும் முடிச்சு...'

● என் கோமதி, நெல்லை

***விரக்தியில் பிறக்கும் தத்துவம், சில சமயம் குலுங்கிச் சிரிக்க வைக்கிறதே...?***

ஒருமுறை ஒரு வீட்டில் ஷூட்டிங். ஆரம்பத்திலேயே வீட்டின் சொந்தக்காரர், 'யாரும் செடி கொடிகளைத் தொட்டு பாழாக்கக் கூடாது. பூக்களைப் பறிக்கக் கூடாது' என்று ஏக கறாராக கண்டிஷன் போட்டுவிட்டுத்தான் ஷூட்டிங் செய்யவே அனுமதித்தார். எங்கள் யூனிட்டைச் சேர்ந்த ஒருவன், அங்கிருந்த மாமரத்திலிருந்து ஒரு மாங்காயைப் பறித்து விட்டான். விஷயம் தெரிந்து வெறியான வீட்டுக்காரர், எங்களை நிறுத்திவைத்து நாக்கைப் பிடுங்கிக்கொள்கிற மாதிரி காட்டுக் கூச்சல் போட்டு,



கவர்ச்சி -





# கிரேஸியைக் கேளுங்கள்

கன்னா பின்னாவென்று திட்டத் தொடங்கினார். 'ஒரு மாங்காய்க்கு இவ்வளவு அமர்க்களம் செய்கிறாரே' என்று பொறுமையிழந்த நான், 'சாரி சார்... மன்னிச்சுக்குங்க... மாங்காய் பறிச்சது தப்புதான்... அதுக்குப் பதிலா இந்த ஆயிரம் ரூபாயை வச்சுக்குங்க' என்று எடுத்துக் கொடுத்தேன். அவர் பதிலுக்கு பத்தாயிரம் ரூபாயை எடுத்து வந்து என்னிடம் கொடுத்து, 'சரி... மன்னிச்சிடறேன்... எங்கே... பறித்த மாங்காயை அதே கிளையில் ஒட்ட வையுங்கள்' என்றாரே பார்க்கலாம்! நாங்கள் மாங்காய் மடையன்கள் போல முழித்தோம். 'எதையும் அழிப்பது சுலபம்; ஆனால், ஆக்கல் கடினம்' என்பதை தோட்டம் பாமரான விரக்தியில் அவர் கூறியது, எங்களைச் சிரிக்கவும் வைத்தது; அதிலுள்ள தத்துவம் சிந்திக்கவும் வைத்தது.




● வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்

***நல்ல எண்ணம், நல்ல செயல், நல்ல சிந்தனை இருந்தால் கோயிலுக்குக் கூட போக வேண்டாம் என்கிறார்களே...?***

நல்ல எண்ணத்தோடு கோயிலுக்குப் புறப்பட்டு, கோயிலுக்குப் போகும் வழியில் நல்ல செயல்கள் புரிந்து, கோயிலில் தெய்வத்திடம் உலக நன்மைக்காக நல்ல சிந்தனையோடு பிரார்த்திப்பவர்கள் வீட்டுக்குப் போனாலே, நமக்கு கோயிலுக்குச் சென்ற புண்ணியம் கிடைக்கும்.

● ஸ்ரீலதா, மும்பை

***வம்பு பேசுபவர்கள் வாயை அடைப்பது எப்படி கிரேஸி...?***

ரொம்ப கஷ்டம். 'வம்புக்கும் உண்டோ அடைக்கும் தாள்' அடைக்க நாம் முயற்சித்தால், அது அனாவசிய வம்புலதான் போய் முடியும்.

● எஸ். வெங்கட்ரமணன், சென்னை

***கவர்ச்சி என்பது பனிமலையா? எரிமலையா?***

இளமை, இலை காய் 'மறைமலையாக' இருந்தால் கவர்ச்சி. வயதானவர்கள் கவர்ச்சிக் கோலத்தில் வந்தால் அது அலங்கோலமான 'முதுமலை'!

# பனிமலையா? எரிமலையா?



# தினமும் மூணு வேளை கை தட்டல்!

‘‘கர்ப்பிணிகளுக்குத் தடுப்பூசி போடற இன்றைய கண்டுபிடிப்பைத்தான் அன்றைக்கே 'வளைகாப்பு'ன்னு நடத்தி னாங்க. மணிக்கட்டில் அந்த வளையல்கள் தர்ற மெதுவான அழுத்தம், நோய் எதிர்ப் புச் சக்திக்கும், கர்ப்பிணிகளுக்குப் பால் சுரப்புக்கும் வகை செய்யுதுங்கிற உண் மையை அந்தக் காலத்திலேயே கண்டு பிடிச்சுட்டாங்க!'' என்று ஆச்சரியத் தகவல் தருகிறார் 'அக்குபிரஷர்' டாக்டர் எம்.என். சங்கர்.

''ஆண்களுக்குக் காப்பு, பெண்களுக்கு வளையல்ன்னு முறைப்படுத்தி வைச்சி ருந்தாங்க. மணிக்கட்டுக்கு அழுத்தம் கொடுத்தா, வெள்ளை அணுக்கள் சுரப்பு மையம் தூண்டப்பட்டு, ஆண் - பெண் பாலுறுப்பு ஹார்மோன்கள் சமச்சீர் அடை யும். கெட்டியான கொலுசு அணியும் பெண்களுக்கு, மாதவிடாய்க் கோளாறு களுக்கு வாய்ப்பே இல்லை. அணிகலன் கள் எல்லாமே அழகுக்காக மட்டுமில்லாம ஆரோக்கியத்துக்கான திருவுருவமாதான் பார்த்திருக்கிறாங்க நம்ம முன்னோர்கள்! நாம் அணியும் ஒவ்வொரு ஆபரணமும் 'அக்குபிரஷர்' அடிப்படை யிலேதான் செஞ்சிருக்கிறாங்க. நம்ம ஆளுங்க, அந்தக் காலத்திலேயே விஞ்ஞா னத்தையும் மெய்ஞ்ஞானத்தையும் ரொம் பவே பிரமாதமா கையாண்டிருக்கிறாங்க!'' என்கிறார்.



'அக்குபிரஷர்'ன்னா, 'சக்தி மருத் துவம்'னு அர்த்தம்! நம்ம உடம்புக்கு உள் ளங்கைகள்தான் 'சுவிட்ச் போர்டு'. அந்த அளவுக்கு மனித உடம்பைக் கட்டுப் படுத்துது உள்ளங்கைகள்.

கைவிரல்கள் ஐந்தும் பஞ்ச பூதங்க ளோட அடையாளம்! கட்டைவிரல் நெருப்பு, ஆட் காட்டி விரல் வாயு, நடு விரல் ஆகாயம், மோதிர விரல் நிலம்,

சுண்டு விரல் நீர்! டாக்டர் தேவை யில்லை... மருந்து தேவையில்லை... நம்ம கையிலேயே இருக்கு மருத்துவம்! தீராத தலைவலியா? சிம்ப்பிளா வைத்தியம் பார்க்கலாம்! கட்டை விரலில் ரெண்டு மரக்கிளிப்! ஆட் காட்டி விரலையும் நடுவிரலை யும் சேர்த்து ரெண்டு ரப்பர் பேண்ட்! பத்து நிமிஷத்திலே தலைவலி போயே போச்சு!


● எம்.சங்கர்



''அக்கு பிரஷர் மூலம் நோய் வருவதை முன் கூட்டியே தெரிஞ் சுக்கவும், வந்த நோயை ரொம்ப சுலபமா கண்டுபிடிச்சு, மருந்து, மாத்திரை, டெஸ்ட், ஆப ரேஷன்னு செலவே வைக்காம எப்படிப்பட்ட நோயையும் குணப் படுத்திடவும் முடியும்! இதுதான் 'அக்குபிரஷர்' தனித்துவம்!'' என்கிறார் டாக்டர் சங்கர்.

''தலைவலி, கைகால் வலி, உடம்பு வலி, மூட்டு வலி, காய்ச்சல், சைனஸ், தூக்கமின்மைன்னு உடல் உபாதை களிலிருந்து, தீராத நோய்கள் வரைக்கும் எல்லாமே ஏதாவதொரு முத்திரையைக் காட்டற மாதிரிதான் வடிச்சிருக்காங்க. உதாரணமா, ஆட்காட்டி விரலும் கட்டை விரலும் சேர்த்தபடி இருக்கும் 'சின்'

# - அக்கு பிரஷர் அதிசயம்!

'அக்குபிரஷர்'ல தீர்வு இருக்கு. 'உலக சுகாதார அமைப்பு', கைதட்டல்கூட யோகாசன பயிற்சியின் ஒரு அங்கம்தான்னு ஒத்துக்கிட்டிருக்கு.

'மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த உங்கள் கைகளில் உள்ள ரகசிய சக்தி கேந்திர்ய புள்ளிகளை, மெதுவாக அழுத்தி விட்டே எல்லா நோய்களையும் குணப் படுத்திட முடியும்!'னு 'ரிக்' வேதம், அழுத் தம் திருத்தமா சொல்லுது. ஆனா, அந்த ரிக்வேதம் தோன்றிய நம்ம தேசத்திலே 'அக்குபிரஷர்' அதற்குண்டான மதிப்பை இன்னமும் அடையலேங்கிறதுதான் வருத் தமா இருக்கு. ஆனா, நம்ம பாரம்பரிய வைத்திய முறையான இது, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, பிரான்ஸ்னு கொடிகட்டிப் பறக்குது!

நம்ம கோயில்களில் கடவுள் சிற்பங்கள் முத்திரை, மனத்தையும் அறிவையும் ஒருமுகப்படுத்தற ஃபார்முலாவைக் குறிக் கும்.

இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர்ன்னு எந்த மதமா இருந்தாலும் ஜெபமாலையை 'சின்' முத்திரை வடிவில்தான் உருட்டுவாங்க! அந்த ரெண்டு விரல்களிலும் இருக்கிற சக்திப் புள்ளிகளைத் தூண்டும்போது, ஞாபகசக்தியும், அறிவாற்றலும் பெரு கும்னு 'அக்குபிரஷர்' சொல்லுது!

இந்த அருமையான 'அக்குபிரஷர்' மருத்துவ முறையை, பள்ளிக் கல்வியிலே ஒரு பாடத்திட்டமா கொண்டு வந் தோம்ன்னா, நோய்-நொடி, மருந்து-மாத்திரை இல்லாத வருங்கால சந்ததியை நிச்சயமா உருவாக்க முடியும்!'' என்கிறார் டாக்டர் சங்கர்.

– எம்.ஆர்.இராஜேந்திரன்



# கல்கி




**2008 ஜூன் 15**
**ஸர்வதாரி ஆனி 1**
**மலர் : 66**
**இதழ் : 46**


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## அன்னாடங்காய்ச்சி அங்குசாமியின் திறந்த மடல்!

**ரொ**ம்ப ஒசரத்துல இருக்கற நிதியமைச்சர் சிதம்பரம் ஐயா அவங்களுக்கு.

கும்பிடறேனுங்க.

நம்ம நாட்டுப் பொருளாதாரத்துக்கு என்ன கேடுன்றதப் பத்தி ரெண்டு நாளா ஜெயலலிதா அம்மாக்கும் உங்களுக்கும் நடந்த ஆர்கிமென்ட்டெல்லாம் டீ.வி.ல பாத்துத் தெரிஞ்சுக்கிட்டேனுங்க. ஒண்ணும் புரியலைன்னு சத்தியமா சொல்லிக்கறேன்.

என் புத்திக்குப் புரியறதெல்லாம் இரண்டு விசயம்தானுங்க -

ஒண்ணு - நீங்க மறுபடியும் பெட்ரோல், டீசல், கேஸ் விலையையெல்லாம் எக்கச்சக்கமா ஏத்திட்டீங்களாங்காட்டும்.

இரண்டு - அதனால சத்தியமா விலைவாசி இன்னமும் அதிகமா உச்சாணிக் கொம்புல ஏறிக்கிட்டு, அங்கேருந்து செங்குராங்கு கணக்கா, என்னை மாதிரி அன்னாடங்காய்ச்சிங்களைப் பார்த்துப் பழிச்சுக் காட்டுமுங்க.

இந்த இரண்டு விசயம் புரிஞ்சுக்கறதுக்கு, உங்கள மாதிரியோ நம்ம பிரதமரு ஐயா மாதிரியோ பெரிய மேநாட்டுப் படிப்பெல்லாம் தேவையில்லீங்க. என்னை மாதிரி உழவனா இருந்து உழைச்சு, கடைசில கணக்குப் பாத்து ஒழக்குகூட மிஞ்சாமப் போகற பட்டறிவே போதுமுங்க!

நீங்களும் சரி, கலைஞரய்யா கவருமென்டும் சரி, என் னென்னமோ செஞ்சு பாக்கறீங்க. இரண்டு ரூபாய்க்கு அரிசி, ரேஷன் கடையில பருப்பு, இருபது ரூபாய்க்கு ஹோட்டல் சாப்பாடுன்னு அவரு

கதவைத் தாப்பாள்
போடத்தான் வந்தேன்
கோவிச்சுக்காதே
மகனே!

பிறந்தநாள்
வாழ்த்து




ரொம்பத்தான் மெனக்கெடறாரு; கிராமத்தானுக்கு கியாரன்டியா வேலைன்னு திட்டம் கொண்டாந்து, நீங்களும் ஈர மனசோட ஒதவப் பாக்கறீங்க... ஆனா, இதெல்லாம் சுத்த வேஸ்டுங்க! வெளி அரிசி இருவது ரூவா விக்கையில இரண்டு ரூபாய்க்கு ரேஷன்ல அரிசி போட்டா அது எப்படிப்பட்டதா இருக்கும்னு நீங்களோ கலைஞ்சரய்யாவோ என்னிக்காச்சும் ரோசனை பண்ணிருக்கீங்களா?

கேஸ் அடுப்பையும் டீ.வி. பொட்டியையும் இனாமா தந்துட்டீங்க. நாங்க சிலின்ட்ரு வாங்க காசுக்கு டீ.வி. பொட்டிய வித்துக்கவா? (அத்த யாரும் வாங்கமாட்றாங்கன்றது வேற விசயம்!)

வேலை வாய்ப்பு கியாரன்டின்னு, கிராமத்தானுக்கு, ரோடு போடற வேலையும் காவா வெட்டுற வேலையும் தந்து, வருசத்துல நூறு நாளைக்கு, கால் வயிறு ரொம்ப வெச்சா போதுமுங்களா? குறை நாளுக்கு அவன் என்ன செய்வான்?

''தே! சும்மா புலம்பிக்கினு!''ன்னு என் பொஞ்சாதி மாதிரி நீங்களும் திட்டுறது புரியுது. ஆனா, ரோசனை பண்ணிப் பாருங்க - நான் இளவயசுக்காரனா இருந்தப்போவும் பணக்காரனில்லீங்க; ஆனா, கஞ்சிக்கும் கந்தைக்கும் அப்போ இப்படிக் கஷ்டப்படலை! இன்னிக்குப் பருப்பு - புளி - எண்ணெய் மட்டுமில்லீங்க, கெட்டகேடு கீரையும் முருங்கையும்கூட விஷமால்ல விலையேறி இருக்கு!

விலைவாசியைக் குறைக்க 'ஐடியா' சொல்லுன்னு கேட்டீங்களாமே...? எனக்குத் தெரிஞ்சதைச் சொல்றேன் - நான் நூறு ரூபா சம்பாதிச்சா என் பொஞ்சாதி 95 ரூபாய்க்குள்ள வூட்டுச் செலவை அடக்கிடுவா. அவ்ளோதான். கவருமென்டு செலவையும் அதே மாதிரி கட்டுப்பாடா பண்ணிப் பாருங்க - காயித காசு புழக்கம் கம்மியாகி, விலைவாசியும் மட்டுப்படும்.

பெட்ரோல், டீசல் விலை ஏறிட்டதால ஜனங்க சொந்த வண்டிங்களை ஓரங்கட்டிட்டு பஸ்ஸு - ரயில்ல போகணும்னு அட்வைஸ் பண்ணீங்களே... அத மொதல்ல மந்திரிங்களும் அரசியல் தலைவருங்களும் செஞ்சு காட்னா என்ன? நாலு ஃபோனு, இரண்டு காரு, இலவச மின்சாரம்னு நாடாளறவங்களே வேட்டு விடலாமா...? நாடு கஸ்டத்துல இருக்குங்கய்யா! ரோசனை பண்ணுங்க.

அன்பு மறவாத அன்னாடங்காய்ச்சி,

அங்குசாமி



# எப்படித் தோற்றோம்?

ச.ந.கண்ணன்

**பீ**மபுஷ்டியுடன் இருந்த ஷேன் வார்ன் அணியை, கடைசி பந்துவரை கொண்டு சென்று போராட வைத்ததற்காக, சென்னை சூப்பர் கிங்ஸ் அணிக்கு பூச்செண்டுகள் அளிக்க நிறைய பேர் காத்திருக்கலாம். ஆனால், ஐ.பி.எல். போட்டியைச் சுலப மாக வென்றிருக்க வேண்டிய தோனியின் அணி, கவனமின்மை, பொறுப்பின்மை காரணமாகவே கோப்பையை வார்னிடம் தாரை வார்த்துவிட்டிருக்கிறது என்றே கூற வேண்டும்.

எந்தவொரு முன்னேற்பாட்டிலும் சென்னை அணி இறங்க வில்லை. ஃப்ளமிங்கை மட்டும் எப்படி நம்பினார்கள் என்று புரியவில்லை. அப்புறப்படுத்தப்பட்ட சுபுகெடராவை எதற்காகத் தேடிப்பிடித்து அழைத்துவர வேண்டும் என்று உண்மையிலேயே புரியவில்லை. அவரது மோசமான ஆட்டம், உண்மையிலேயே இவர் சர்வதேச கிரிக்கெட் வீரர்தானா என்கிற பலத்த சந்தேகத்தையும் ஏற்படுத்தி விட்டது. ஃபைனலில் சென்னை அணி தோற்றதற்கு முதல் காரணம் சுபுகெடரா தான். பத்ரிநாத்துக்கு முன்னால் சுபுகெட ராவை இறக்கியது தற்கொலைக்குச் சம மாகிவிட்டது. இந்த ஒரு முடிவுக்காக தோனி, கெப்ளர் வெஸல்ஸ் இருவரும் கடுமையாகக் கண்டிக்கப்பட வேண்டி யவர்கள்.

**ப**ஞ்சாப் அணியுடனான ஆட்டத்தில் மட்டும்தான் சென்னை அணியிடம் ஒரு உஷார்த்தனம் தெரிந்தது. ஃபை னல்ஸ்ஸில் மந்தமாக ஃபீல்டிங் செய்ததை மன்னிக்கவே முடியாது. அதிலும் வித்யுத் சிவராமகிருஷ்ணன் எந்த ஒரு பொறுப்பும் இல்லாமல் ஆடியது இன்னொரு அதிர்ச்சி.

அடுத்தவர் பாலாஜி. முழுவதுமாக ஃபிட் ஆகாத நிலையில் இவரை சென்னை அணிக்காக ஆட வைத்தது இன்னொரு தவறு.

கடைசி பந்தில் ஒரு ரன் தேவை எனும் பட்சத்தில், உலகிலுள்ள எல்லா பந்து வீச்சாளர்களும் யார்க்கருக் குத்தான் முயற்சி செய் வார்கள். அதிலும் குறை வைத்தது சூப்பர் கிங்ஸ்! எந்தவொரு சரியான திட் டமுமின்றி கோப்பையை வார்னிடம் தாரை வார்த்து விட்டனர் தோனி அணி யினர்.

தோல்விகள் விளை யாட்டில் சகஜம்தான். ஆனால், எவ்வாறு தோற் கிறோம் என்பது முக்கி ம்.







# சொக்குதே மனம்

உள்ளத்தை கொள்ளை கொண்ட பழையபாடல்களை நம் இல்லத்தை நோக்கி வரவழைக்கும் இனிய நிகழ்ச்சி சொக்குதே மனம். ஜெயா தொலைக்காட்சியில் ஞாயிறு இரவு 9.15த் ஒளிபரப்பாகிவந்த இந்த நிகழ்ச்சி இப்போது வெள்ளிக்கிழமை தோறும் இரவு 9.30மணி முதல் 10.30 மணி வரை ஒளிபரப்பாகிறது

கல்வெட்டுக்களை போல காலத்தால் அழித்து விட முடியாத காவியப் பாடல்கள் தமிழ்த் திரை உலகில் ஆயிரக் கணக்கில் இருக்கின்றன எத்தனை முறை பார்த்தாலும் அலுக்காத அருவிகளைப் போல எத்தனை முறை கேட்டாலும் திகட்டாத தேனருவிகள் அவை.

அன்றைய பாடல்களை இன்றைய இசைக்கலைஞர்கள் தடம் மாறாமல் தாளம் மாறாமல் தருகிற இந்நிகழ்ச்சியை இரவுப்பொழுதில் கேட்கும் போது கிடைக்கிற சுகம் அலாதியானது.

மேடையில் இசைக் கலைஞர்கள் இசைத்துக் கொண்டிருக்க, பாடகர்கள் மாறாத குரல் வளத்தோடு நம்மை மயக்கிக் கொண்டிருக்க இன்னொரு புதுமையும் இந்நிகழ்ச்சியில் உண்டு. என்ன அது..?
பாடகர்களின் உதட்டசைவிற்கு ஏற்றாற்போல பாடலின் அதற்குரிய பகுதியும் அந்தந்த திரைப்படங்களிலிருந்து எடுக்கப்பட்டு ஒளிபரப்பாவதுதான், அந்தப் புதுமை.

தொலைக்காட்சியில் நிகழ்ச்சியைப் பார்த்த நேயர்கள் சொக்குதே மனம் நிகழ்ச்சியை தங்கள் ஊரிலேயும் நடத்தவேண்டுமென்று ஆசைப்பட்டு அவ்வப்போது அழைத்து நடத்துகிறார்கள். வெளிநாடுகளிலிருந்தும் அனேக அழைப்புகள். ஏறத்தாழ இந்தியாவில் எல்லா நகரிலும் நடைபெற்றிருக்க சொக்குதே மனம் நிகழ்ச்சி கோடிக்கணக்கான ரசிகர்களை கவர்ந்திருக்கிறது.

வாரந்தோறும் புதிய புதிய பழைய பாடல்கள் இடம் பெறுகிற இந்நிகழ்ச்சியில் அவ்வப்போது புதிய குரலிசைக் கலைஞர்களும் பங்கேற்கின்றனர்

தொலைக்காட்சியை நேசிப்பவர்களின் வீட்டு நிகழ்ச்சியாக இருக்கும் இப்பாட்டு நிகழ்ச்சியை பார்க்க பார்க்க சுகம். வெள்ளிதோறும் 9.30இரவு விடாமல் பாருங்கள்

இப்படி அற்புதமான பழைய பாடல், தாளம் மாறாத தரமான இசை,வளமான குரல் வளம், விழியில் விரியும் பாடலின் படக்காட்சிகள் இப்படி ஒரு பாட்டுத் தீபாவளியாக பவனி வரும் இந்நிகழ்ச்சியை வெள்ளி தோறும் இரவு 9.30க்கு தவறாமல் பாருங்கள்

நிகழ்ச்சியை தங்கள் ஊரில்நடத்த விரும்புவர்கள் உடனடியாக சொக்குதே மனம் நிகழ்ச்சி மேலாளரை தொடர்பு கொள்ளுங்கள். **9840313106**

# டிஜிட்டல் கேன்டீன்-10

அறுபத்தைந்தாவது திருவிளையாடல்களை நிகழ்த்த முடிவெடுத்த சிவபெருமான், விண்ணுலகிலிருந்து இறங்கி வர உத்தேசித்தால், கொஞ்சம் யோசிக்க வேண்டியிருக்கும். கூட்டமாக நின்று பார்த்த பொதுஜனம், ஆச்சரியமே படாமல் 'அட, கிராஃபிக்ஸ்' என்று கமெண்ட் அடித்துவிட்டு, கும்பிடு போடக் கோயிலுக்கு நகர்ந்துவிடக்கூடும். தமிழ் சினிமாவில் தொடங்கி சின்னத்திரை சீரியல்கள் வரை சகல அற்புதங்களையும் கிராஃபிக்ஸ் ரூபத்தில் பார்த்துப் பழகி விட்டதே காரணம்.

1917ல் உருவான ரோட்டோஸ்கோப்பும், 90களில் பரவலான கம்ப்யூட்டர் தொழில் நுட்பமும் கைகோத்து உருவாக்கிய திரைப்படப் புரட்சி, அனிமேஷன். தொண்ணூறு வருடங்களுக்கு முன்பு, பேசாப் படங்களை நம் கொள்ளுத் தாத்தாக்கள் ஜொள்ளு விடக்கூட மறந்து பார்த்தபோது, அட்டைக் கத்தி ஹீரோ, ஹீரோயின்களோடு கார்ட்டூன் பாத்திரங்களும் திரையில் தோன்றிவிட்டார்கள்.

ஒரு நிமிடம் திரையில் கார்ட்டூன் ஓட ஆயிரக்கணக்கில் படம் வரைந்து தள்ள வேண்டியிருந்த காலம் அது. பிறகு யாரையாவது கையைக் காலை அசைக்கச் சொல்லிவிட்டு, அந்தத் திரைப்படத் துணுக்கை ரோட்டோஸ்கோப்பில் ஓட விட்டார்கள். மேலே காகிதத்தை வைத்து, அதை ஃப்ரேம் ஃப்ரேமாக அப்படியே டிரேஸ் செய்தார்கள். இந்தப் படங்களை ஒட்டுமொத்தமாக கொஞ்சம் திருத்தி ஓடவிட்டபோது, இயல்பாக நகர்கிற கார்ட்டூன் கிட்டியது. 1930களில் வால்ட் டிஸ்னியின் 'ஸ்நோ ஒயிட்' படத்துக்காக ஒரு பள்ளி மாணவி ஸ்நோ ஒயிட்டாக ஆடுவதை காமரா படம்பிடிக்க, ஓவியர்களின் ஒரு பட்டாளமே அந்தப் படச் சுருளை அடிப்படையாக வைத்து, முழுத் திரைப்படத்தையும் கை வலிக்க வரைந்து உருவாக்கியது. படம் போட்டுக் கதை சொல்லி சூப்பர் ஹிட் ஆன முதல் கார்ட்டூன் சினிமா படம் அது.

டிஸ்னிக்கு அப்புறம் அனிமேஷனுக்கு நட்சத்திர அந்தஸ்தைக் கொடுத்தவர் திகில்படச் சக்கரவர்த்தி ஆல்ஃப்ரட் ஹிட்ச்காக். படம் 'பறவைகள்' (The Birds). இப்படத்தில் ஒரு சின்ன ஊர். அங்கே இருக்கிற பறவைகளுக்கு ஏதோ அசம்பாவிதம் நிகழ, ஊரையே எதிர்த்து அழிக்கிற வெறியோடு அவை முன்னேறும். ஆரம்பப் பள்ளிக்கூட வகுப்பு முடிந்து மாலை நேரத்தில் வீடு திரும்பும் குட்டிக் குழந்தைகள் மேல், காக்கைகள் படையெடுத்து வந்து தாக்குகிற திகில் காட்சியை, படம் பார்த்தவர்கள் இலேசில் மறக்க முடியாது. இந்தப் படப்பிடிப்பின்போது, குழந்தைகள் நிஜமாக ஓடினார்கள். பத்து நிமிடம் நகரும் அந்தக் காட்சி ரோட்டோஸ்கோப்பில் வைக்கப்பட்டது. குழந்தைகளின் நகரும் உருவங்கள் அவுட்லைனாக டிரேஸ் செய்யப்பட்டு, கறுப்பு பூசப்பட்டது. சொரசொரப்பான பரப்பில் இந்தக் கறுப்பு அவுட்லைனோடு தயாரான பின்னணியில் ('மாட்'), பறக்கும் காக்காக் கூட்டம் சாவகாசமாக ஒட்டவைக்கப்பட்டது. அதிலும் சிலது மட்டும் நிஜமான காக்கா. மீதி, கையால் வரையப்பட்ட நகல் ஓவியங்கள்! காக்கைகள் பறக்கும் காட்சியும், குழந்தைகளின் அவுட்லைனும் கொண்ட இந்த மேட் மீது, குழந்தைகள் ஓடும் ஒரிஜினல் படச் சுருள் அமர்ந்தது. அலறி ஓடும் குழந்தைகளைக் காக்கைகள் துரத்தும் திகில் எஃபெக்ட் படம் ரெடி!



தற்போது மட்டார், பின்னகில் கமோஷன், ஸ்கோப் போன்ற கம்ப்யூட்டர் மென்பொருள்கள் பயன்படுத்தப்பட்டு, அதிநவீன ரோட்டோஸ்கோப்பிங் நடத்தப்படுகிறது. படத்தை டிரேஸ் செய்ய,

இரா. முருகன்

ஈஸ்ட்மென், டெக்னிக் கலரில் வண்ணங்களை நிரப்ப, விரசாக நகலெடுத்து ஒன்றைப் பலவாக உருவாக்கி நிறுத்த எல்லாம் இந்த மென்பொருள் கைகொடுக்கிறது. 'ஜுராசிக் பார்க்' படத்தில் நடைபோடும் டைனோசர்கள், கம்ப்யூட்டர் ரோட்டோஸ்கோப்பிங்கில் பிறந்தவை. நிஜ டைனோசர்கூட இவைபோல் அதி பயங்கரமாக இருந்திருக்காது.

டைனோசரையோ, டெர்மினேட்டரையோ கம்பீரமாக உலவவிட்டாலும், கம்ப்யூட்டரில் ரோடோஸ்கோப்பிங் அனிமேஷன் கலைஞர்கள் ஏதாவது ஒரு படத் துண்டில் வரைந்தது தவறாகிப் போனால், கன்னத்தில் கை வைத்துக் கவலைப்படுகிறார்கள். ஒரு வினாடியில் இருபத்துநான்கில் ஒரு பங்கு நேரமே ஒரு ஃப்ரேம் திரைப்படம் பார்க்கிறவர் கண்ணில் படப் போகிறது. கன்னத்தில் இருந்து கையை எடுத்துவிட்டு அடுத்த இருபத்து மூணு ஃப்ரேமிலும் சீராக அதே தப்பைச் செய்தால் போதும். மகாஜனங்கள் கண்டுக்க மாட்டார்கள். ஏமாற்றவும் கம்ப்யூட்டரே துணை! ●

# கிராஃபிக்ஸ் ரகசியங்கள்!





ஆழ்வார்களுக்குள்ளே நம்மாழ்வாருக்கு நிகராக இன்னொருவர் இல்லை; ஏன், பக்தர்களெல்லோரிலும் சிறந்த பக்தர் நம்மாழ்வார்தான். அதனால்தான்,

*உண்டோ வைகாசி விசாகத்துக்கு ஒப்பு ஒருநாள்*
*உண்டோ சடகோபர்க் கொப்பொருவர்*
*உண்டோ திருவாய்மொழிக்கு ஒப்பு - தென்குருகைக்*
*குண்டோ ஒரு பார்தனில் ஒக்கும் ஊர்!*

என்று மணவாள மாமுனிகள் உபதேச ரத்ன மாலையில் பாடினார்!

நிகரற்ற பக்தராம் நம்மாழ்வார் தோன்றிய நக்ஷத்திரமும், அவர் படைத்த திருவாய்மொழியும், அவர் அவதரித்த ஊரான திருக்குருகூருமே கூட ஒப்பற்ற பெருமை பெற்றுத் திகழ்கின்றன. இவர் பாடிய பிரபந்தங்களுள் திருவாய்மொழி, உபநிஷத்



# தந்தோம்! தந்தோம்! தந்தோம்!



துகளுள் சாலச் சிறந்ததாகக் கொண்டாடப்படுகிற சாந்தோக்ய உபநிஷத்தின் ஸாரம்! 1102 பாசுரங்கள்! வேதத்தையே தமிழாக்கித் தந்த திருக்குருகூர் சடகோபனை அந்த ஸ்ரீரங்கநாதரே 'நம்மாழ்வார்' என்று பெயரிட்டு அழைத்துப் பெருமைப்படுத்தினார்.

திருக்குறுங்குடி நம்பியிடம் வேண்டிக்கொண்டு காரி - உடையநங்கை என்ற தம்பதி நம்மாழ்வாரைப் பெற்றனர் என்பதை அந்த திவ்யதேசத்துக்குச் சென்ற போது நாம் பார்த்தோம். அந்த அற்புதக் குழந்தை

# கண்ணனைத் தேடி 8



• திருக்குருகூர்

அவதரித்ததுமே, எல்லாக் குழந்தைகளையும் போல் அழவில்லை; பால் குடிக்கவில்லை. திருக்குருகூர் ஆதிநாதப் பெருமாள் கோயிலில் உள்ள புளியமரத் தடிக்குத் தவழ்ந்துபோய் அமர்ந்துவிட்டது! பிறந்து பதினாறு ஆண்டுகள் வரை, வாய் திறந்து ஒரு சொல்கூடப் பேசவில்லை. கையிலே ஞானமுத்திரை காட்டி, தியானத்தில் - யோகத்தில் ஆழ்ந்துவிட்டது. அதன் பிறகுதான் அடுத்த பதினாறு ஆண்டுகள், நான்கு திவ்யப் பிரபந்தங்களைப் பாடிய ஆழ்வாராகத் திகழ்ந்தது அந்த தெய்விகக் குழந்தை!

எங்கும் சென்று சாஸ்த்ரங்களைப் படிக்காதபோதிலும், உபநிஷத்துக்களின் திரண்ட கருத்து எவ்வாறு அவருடைய பிரபந்தங்களுக்குள் வந்தது என்று நமக்கு வியப்பு உண்டாகும்.

''யாரைப் போல பிள்ளை வேண்டும்?'' என்று திருக்குறுங்குடி நம்பி கேட்டபோது, ''உன்னைப் போல'' என்று சொன்னார்களே காரியும் - உடையநங்கையும்! தன்னைப் போல் இன்னொருவர் இல்லை என்பதால்



தானேதான் வந்து குருகூர் சடகோபராக அவதரித்தார் பெருமான். அவரிடமிருந்து பிறந்த பிரபந்தங்களிலே உபநிஷத்துகளின் ஸாரம் நிரம்பியிருப்பதில் ஆச்சர்யமென்ன!

திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரிக்குச் செல்கிறபோது, இன்றைக்கும் சடகோபர் அமர்ந்திருந்த உறங்காப்புளி மரத்தைக் காணலாம். திருப்புளி ஆழ்வார் என்றே அழைக்கப்பட்டு அவரும் வணங்கப்படுகிறார்.

வகுளமாலை (மகிழம்பூ மாலை) அணிந்து இம்மரத்தினடியில் மகான் ஒருவர் தவம் செய்து வருகிறார் என்பது, வடக்கே வெகு தூரத்தில் இருந்த மதுரகவி ஆழ்வாருக்கு உணர்த்தப்பட்டது. திருக்கோளூரில் பிறந்த மதுரகவியாழ்வார் வடநாட்டிலே வாழ்ந்து வந்தார். ஒருநாள் மாலைப் பொழுதில் தெற்கு நோக்கிப் பார்த்தபோது, ஒளிப் பிழம்பு ஒன்றைக் கண்டார். அந்தச் சூரியன் தம்மை அழைப்பதாக உணர்ந்து அதை நோக்கிப் புறப்பட்டார். திருமலை திருப்பதி, திருஅல்லிக்கேணி, திருவரங்கம் எல்லாம் தாண்டி, மதுரை பட்டணத்தையும் தாண்டி, திருநெல்வேலி தாண்டி திருக்குருகூர் வந்தார். புளியமரத்தடியில் ஆழ்வார் யோக நித்திரையில் இருக்கக் கண்டார். நாளுக்கு நாள் பிறை வளர்ந்து நிலவின் ஒளி கூடுவதுபோல் நம்மாழ்வாரிடத்திலே ஞானஒளி கூடக் கண்டார். இவரை எப்படியாவது பேச வைத்துவிட வேண்டும் என்று ஒரு கல்லைத் தூக்கிப் போட்டார். அதன் ஒலி கேட்ட உடனே நம்மாழ்வாரும் திடுக்கிட்டுக் கண் மலர்த்தி நோக்கினார். முதன்முதலாக நம்மாழ்வாரின் கண்பார்வைக்கு இலக்கானவரே மதுரகவிதான்! அவருக்கு ஒரு திருப்தி. 'இவர் பேசுவாரா?' என்று பரிசோதிக்க, ''செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' என்று மதுரகவி கேட்டதும், ''அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'' என்று நம்மாழ்வார் பதில் சொன்னதும் வேண்டுமானால் நமக்குப் புரியாத தத்துவங்களாக இருக்கலாம். ஆனால், நம்மாழ்வாரின் திவ்யப்பிரபந்தங்கள் நம் செவிக்கும் மனத்துக்கும் தெய்வீக விருந்தாகத் திகழ்கின்றன; மதுரகவியாழ்வாரின் பாசுரங்கள் மனத்தை அள்ளுகின்றன. திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரியில், ஆதிநாதப் பெருமாள் கோயிலில், உறங்காப்புளி மர நிழலில் நிற்கிறபோது, அந்தப் பாசுரங்களையும்





அவை பிறந்த வரலாறையும் ஆழ்வார்களின் மகத்துவத்தையும் எண்ணி எண்ணி வியக்காதோர் இருக்க முடியாது.

பொய்கையாழ்வார் முதல் திருமங்கையாழ்வார் வரையிலான ஆழ்வார்கள் காலத்துக்குப் பிறகு, அவர்கள் பாடியவையெல்லாம் காலப்போக்கிலே தேய்ந்து மறைந்து போயின. ஒன்பதாம் நூற்றாண்டில்தான் காட்டுமன்னார்கோயிலில் (சிதம்பரம் அருகே) நாதமுனிகள் என்ற ஆசார்யர் அவதரித்தார். தமது ஊருக்கு வந்த சில வைஷ்ணவர்கள், கும்பகோணம் ஆராவமுதப் பெருமாள் பற்றிய நம்மாழ்வாரின் பதினொரு பாகரங்களைப் பாடக் கேட்டார் நாதமுனிகள்.

பதினொராவது பாகரத்தில் 'குருகூர்ச் சடகோபன்' என்பவர் அப்பாகரங்களை இயற்றியதாகக் குறிப்பு வந்தது. ஆயிரம் பாகரங்களை அவர் பாடியிருப்பதும் தெரிய வந்தது. நாதமுனிகள் ஆயிரம் பாடல்களையும் அறிய முற்பட்டார். பாடிக் காட்டியவர்களுக்குத் தெரியவில்லை. திருக்குருகூருக்குத் தேடி வந்தார். மதுரகவியாருடைய சிஷ்ய வம்சத்தினர் வேறொரு பதினொரு பாகரங்களைத் தந்தார்கள். அவை மதுரகவியாழ்வார், நம்மாழ்வாரைக் குறித்துப் பாடிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' முதலான பாடல்கள்! அவற்றைத் தந்தவர்கள், ''உறங்காப்புளி மரத்தினடியில் அமர்ந்து, நம்மாழ்வாரைத் தியானித்து அந்தப் பதினொரு பாகரங்களையும் பன்னிரண்டாயிரம் முறை நியமத்தோடு சொன்னால், ஆழ்வாரே விரும்பியதை அருள்வார்'' என்றும் வழிகாட்டினார்கள்.

நாதமுனிகளும் தாமிரபரணியில் நீராடி, நேரே புளியமரத்தினடியில் வந்து அமர்ந்தார். பன்னிரண்டாயிரம் முறை 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' பாடினார்! நம்மாழ்வார் அவர் முன் தோன்றி, ''உமக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்க, ''ஆயிரம் பாகரங்களையும் கொடுத்தருள வேண்டும்'' என்றார். உடனே நம்மாழ்வார், ''ஆயிரத்தை மட்டுமல்ல, நான் இயற்றிய அனைத்தையும் கொடுக்கிறேன்'' என்று திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என அனைத்தையும் கொடுத்ததுடன், ஏனைய ஒன்பது ஆழ்வார்கள் பாடிய பாகரங்கள் அனைத்தையும் நாதமுனிகளுக்கு அருளிச் செய்தார்.

இந்த அற்புதமும் திருக்குருகூர் புளியமரத்தடியிலேதான் நிகழ்ந்தது என்கிற போது, அந்த ஒரு பெருமை போதுமே



✱ ஸ்வாமி நம்மாழ்வார்

இத்திவ்ய தேசத்துக்கு!

**ஆ**னால், ஆழ்வார் பெருமையோடு ஆதி நாதப் பெருமாளின் பெருமையையும் தாங்கி நிற்கிறது திருக்குருகூர். மூல மூர்த்திக்குத்தான் ஆதி நாதப் பெருமாள் என்று பெயர்; உத்ஸவர், பொலிந்து நின்ற பிரான்! தாயார் ஆதிநாயகி (ஆதி நாச்சியார்), தனிச் சன்னிதி கொண்டிருக்கிறார். நம்மாழ்வாருக்குத் தனிச் சன்னிதி இல்லாமலா...?! அவரும் ஆதிநாதப்பெருமாளுக்குச் சமமான ஸ்தானத்துடன் உத்ஸவச் சிறப்புடனும் திகழ்கிறார்.

மார்கழி மாத அத்யயன உத்ஸவத்தின்போது, பொலிந்து நின்ற பிரானும் நம்மாழ்வாரும் ஒரே மண்டபத்தில் எழுந்தருளியிருப்பார்கள். இந்த இராப்பத்து உத்ஸவத்தின்போது பெருமாள் திருவாய்மொழியைச் செவி குளிரக் கேட்கிறான். எல்லாவற்றையும் அரையர் ஸ்வாமிகள் மிக அழகாகத் தாளம் இசைத்துப் பாடுவார்கள். பத்தாம் பத்து அன்று, 'முனியே, நான் முகனே, முக்கண்ணப்பா' என்ற பாசுரம் வரும். அப்போது நம்மாழ்வாரை மெதுவே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய், பெருமானுடைய திருவடிகளிலே சமர்ப்பிப்பார்கள். ஆழ்வாருடைய தலையும் பொலிந்து நின்ற பிரானுடைய திருவடியும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து கிடக்கும்! ஆழ்வார் அப்பொழுதே முக்தி அடைந்தார் என்பது இவ்வூரிலே ஐதிகம்.

ஆழ்வாரைத் திருப்பித் தரும்படி இவ்வூர் மக்களெல்லாம் பிரார்த்திப்பார்கள். பெருமாளும் 'தந்தோம், தந்தோம், தந்தோம்! உங்களுக்காக நம் சடகோபரைத் திருப்பித் தந்தோம்' என்று அருள் புரிவார்!

- இதனினும் சிறப்பு எங்காவது காணக் கிடைக்குமா?

*(தேடுவோம்)*

படங்கள்: **ஸ்ரீஹரி**

சித்திரங்கள்: **வேதா**





கிரையைவிட அதிக மெக்னீஷியமும், புரோக்கோலியைவிட அதிக பொட்டாஷியமும், காரட்டைவிட அதிக கால்ஷியமும் கொண்டது உருளைக்கிழங்கு. எனவே,

# 'உற்சாக கிழங்கு'



**ச**மீப காலமாக உருளைக்கிழங்கு தொடர்பாக அமெரிக்காவில் ஒரு பெரிய சண்டையே நடந்துகொண்டிருக்கிறது.

அங்கே WIC என்று ஓர் அமைப்பு உண்டு. பெண்கள், பச்சிளம் குழந்தைகள், குழந்தைகள் ஆகிய வார்த்தைகளின் (Women, Infants and Children) சுருக்கம்தான் WIC. இந்த அமைப்பின் பரிந்துரைப்படிதான் அரசு உணவு வகைகளுக்கு நிதி உதவி செய்யும். இப்போதைக்கு இந்த அமைப்பு பரிந்துரைக்கும் ஒரே காய்கறி, கேரட் மட்டுமே. இதில் வேறு சில பழங்களையும் காய்கறிகளையும் சேர்த்துக்கொள்ள அமெரிக்க அரசு முடிவு செய்திருக்கிறது. ஆனால், உருளைக்கிழங்கை இதில் சேர்த்துக்கொள்ள மறுத்துவிட்டது.

இதைத் தொடர்ந்து உருளைக்கிழங்கு வியாபாரிகள், அமெரிக்க அரசுக்கு எதிராக வழக்கு தொடுக்கப் போகிறார்களாம். 'பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் கொடுக்க மிகவும் ஏற்றது உருளைக்கிழங்கு. சொல்லப்போனால், பலரும் பெருமை அடித்துக்கொள்ளும் பசலைக் கீரையைவிட அதிக மெக்னீஷியமும், புரோக்கோலியைவிட அதிக பொட்டாஷியமும், காரட்டைவிட அதிக கால்ஷியமும் கொண்டது உருளைக்கிழங்கு. எனவே, அதைப் பரிந்துரைப் பட்டியலிலிருந்து விலக்கி வைக்க எந்த அறிவியல் காரணமும் கிடையாது!'' என்று காரசாரமாக வாதிடுகிறார்கள் உருளைக் கிழங்கு தயாரிப்பாளர்கள்.

ஏற்கெனவே அமெரிக்கர்கள், உருளைக் கிழங்கை ஃபிரெஞ்ச் ஃப்ரை என்ற பெயரில் எக்கச்சக்கமாக எண்ணெயில் வறுத்து உள்ளே தள்ளிக் கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க, இன்னும் எதற்கு உருளைக்கிழங்குக்கு நிதி உதவி? இப்படி ஒரு கேள்வி அரசு அமைப்புக்குத் தோன்றியிருக்கிறது.

நம் நாட்டில் 'உங்களுக்கு மிகவும் பிடித்த காய்கறி எது?' என்று ஓர் ஆய்வை மேற்கொண்டால், நிச்சயமாய் உருளைக் கிழங்குதான் சந்தேகமில்லாமல் முதல் இடத்தைப் பிடிக்கும்.

## கூலா சாப்பிடுங்க!



### பாஜ்ரா வெஜிடபுள் சாலட்

முளைக்க வைத்த கம்பு - 1 கப்
பொடியாக நறுக்கிய கொத்துமல்லி இலை - சிறிதளவு
பொடியாகத் துருவிய கேரட் - அரை கப்
வேக வைத்து உதிர்த்த சோளம் - கால் கப்
பொடியாக நறுக்கிய குடை மிளகாய் - கால் கப்
எலுமிச்சை ஜூஸ் - 2 டீஸ்பூன்
சர்க்கரை - ஒரு டீஸ்பூன்

## டாக்டர் எஸ்.ராஜேந்திரன்

முன்பெல்லாம் உருளைக்கிழங்கை மசித்து வெங்காயத்துடன் கலந்து சமைத்துச் சாப்பிடுவார்கள். நீராவியில் வேக வைத்த உருளைக்கிழங்கு உடலுக்கு நல்லது.

ஆனால், சிக்கல் எப்போது வருகிறது என்றால், 'உருளைக்கிழங்கு என்றால் ரோஸ்ட் செய்ய வேண்டாமா?' என்று நாக்குக்கு அடிமையாகும்போதுதான். இப்படிச் செய்யும்போது, உருளைக்கிழங்கில் உள்ள பல சத்துகள் அழிந்துவிடுகின்றன. போதாக் குறைக்கு சுவைக்காக, உப்பிலிருந்து எண்ணெய் வரை பல விஷயங்களை உருளைக் கிழங்குடன் சேர்த்துவிடுகிறோம். இதன் விளைவாக உடலுக்குத் தீங்குகள் நடைபெறுகின்றன. தவிர, நிறுவனங்கள் தயாரித்து விற்கும் பொட்டாடோ ஃபிங்கர், ஃபிரெஞ்ச் ஃப்ரை, உருளைக்கிழங்கு சிப்ஸ் போன்றவற்றில் சுவைக்காக க்ளுடென் என்கிற புரதத்தைக் கலக்கிறார்கள். அஜினமோட்டோ உப்பும் கலக்கப்படுகிறது. ஒருவித அசைவச் சுவையை இது அளிப்பதால், அசைவ உணவுக்காரர்களுக்கு இதனால் திருப்தி ஏற்படுகிறது.

இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். மேலை நாடுகளில் அசைவம் மிகவும் சகஜம். சிக்கன் பீஸோடு உருளைக்கிழங்கு ஃபிங்கரை அவர்கள் சேர்த்துச் சாப்பிடுவார்கள். உருளைக்கிழங்கில் மாவுச் சத்து மிக அதிகம். அதேசமயம் இறைச்சி போன்றவற்றில் அது குறைவு. எனவே ஓரளவு உணவு பேலன்ஸாக அமைந்துவிடுகிறது.

ஆனால், நம் நாட்டிலோ சாதத்தோடு உருளைக்கிழங்கைச் சேர்த்துக்கொள்கிறோம். இரண்டுமே எக்கச்சக்கமான மாவுச்சத்து கொண்டவை. அதுவும் சர்க்கரை நோய்க்காரர்களுக்கு இது கொஞ்சம் ஆபத்தான காம்பினேஷன். இதைத் தொடர்ந்து உண்டால், பருமனாவது கேரண்டி. பின் என்ன அவ்வளவு கலோரிகள் கொண்டதாச்சே! உற்சாக உருளையிடம் கொஞ்சம் உஷாராக இருக்க வேண்டும்.

எனவே உருளைக்கிழங்கு சாப்பிடும்போது சாதத்தைக் குறைவாக உட்கொள்ள வேண்டும்.

*(தொடரும்)*

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**



**நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 10**

உப்பு, மிளகுத் தூள் - தேவைக்குத் தகுந்தபடி

**மு**ளைக்க வைத்த கம்புடன், வேக வைத்து உதிர்த்த சோளம், நறுக்கிய குடை மிளகாய், துருவிய கேரட், மல்லி இலைகளுடன் எலுமிச்சை ஜூஸ், சர்க்கரை, உப்பு, மிளகு சேர்த்து நன்றாகக் கலக்கவும். குளிர வைத்த பிறகு பரிமாறலாம்.

106 K கலோரி சக்தி கொண்டது. மாவுச் சத்து மற்றும் வைட்டமின் ஏ, சி நிறைந்த சிற்றுண்டி.

# வசூல் ராஜா L.I.C,HFL




அன்று மார்ச் 9, ஞாயிற்றுக்கிழமை, காம்பவுண்ட் கதவு கடந்து வீட்டுக்குள் ரெண்டு பேர் புகுந்துவிட, எழுபத்தியாறு வயதாகும் அப்பா வெங்கடாச்சாரி, 'யார் நீங்க? எதுக்கு வந்திருக்கிங்க?'ன்னு வெலவெலத்துப் போய்க் கேட்கிறார். இரண்டு நபர்களும், அவரைத் தரையில் தள்ளிவிடுகிறார்கள்.' அப்போது ஒருவனின் அடையாள அட்டை கீழே விழுகிறது.

வீட்டுக்குள் ஏதோ களேபரமாகச் சப்தம் கேட்கவும், குளித்துக்கொண்டிருந்த ஸ்ரீதரன் ஓடி வருகிறார். மீண்டும் தன் அப்பாவைத் தாக்க முற்பட்ட அந்த இரண்டு பேரையும் தடுத்தபடியே, தரையில் கிடந்த அடையாள அட்டையைக் கைப்பற்றிக்கொள்கிறார். அந்த அடையாள அட்டையைத் திருப்பிக் கேட்டு, தாக்குகிறார்கள்.

'ஏனிப்படி நடந்துக்கறீங்க?'ன்னு கேட்க, 'டியூவை ஒழுங்கா கட்டுங்க. அடுத்த் மாசம் நாங்க வந்தா இன்னும் மோசமா நடந்துக்குவோம்!' என்று பதிலுக்கு அந்த ரெண்டு தடியர்களும் சப்தம் போட்டபடியே வீட்டிலிருந்த சேர் மற்றும் புத்தகங்களை எடுத்து வீசியெறிகிறார்கள். அமரராகிப் போன அம்மாவின் படத்தை, தரையில் விட்டெறிய, வீட்டார் கூனிக் குறுகிப் போகிறார்கள்.

இது ஏதோ சினிமா காட்சியல்ல, நிஜ வாழ்க்கையில் வங்கிகளில், நிதி நிறுவனங்களில் கடன் வாங்கியோர்க்கு நேரும் அவலத்தின் ஒரு சாட்சிதான் இது.

ஸ்ரீரங்கம், வடக்கு வாசல் தசாவதார சன்னிதி பகுதியில் உள்ளது ஸ்ரீதரன் வீடு. அவர் சாஃப்ட்வேர் இன்ஜினியர். அப்பா, ஓய்வு பெற்ற போஸ்ட்மாஸ்டர். இந்த வீட்டினை வாங்குவதற்காக திருச்சி எல்.ஐ.சி. ஹவுசிங் பைனான்ஸில் 1997ல் இரண்டு லட்சத்து எண்பதாயிரம் ரூபாய் கடன் வாங்கியுள்ளனர். ஒவ்வொரு மாதமும் தவறாது மாதத் தவணை செலுத்தி வந்துள்ளனர். ஒரு சமயத்தில் மூன்று மாதத் தவணைத் தொகையை, முன்னதாகவே செலுத்தி கடிகாரம் பரிசுகூட பெற்றுள்ளனர்.

**நிதி நிறுவனங்களில் கடன் வாங்கியோர்க்கு நேரும் அவலத்தின் ஒரு சாட்சிதான் இது.**

பின்னர், எனித்த வசூல்ராஜா கெடுபிடி சம்பவம் நிகழ்ந்தது?

2007 செப்டம்பரில், அதனையடுத்த ஆறு மாத செக்கினை (2008 மார்ச் வரை) ஆஃபீஸுக்கு அனுப்பி வைத்துள்ளார் ஸ்ரீதரன். அதில்




மதா, ஏரியா மேனேஜர் லதா வெங் கடேஸ்வரன் இருவரும், ''உங்களால என்ன முடியுமோ செஞ்சுக்குங்க; எங்கள யாராலும் ஒண்ணும் செய்ய முடியாது!'' என எச்சரித்துள்ளனர்.

''என் வீட்டுக்கு வந்திருந்த இரண்டு நபர்களும், LIC HFL மூலமாக நியமிக்கப் பட்டிருக்கும் Galaxy Services என்கிற பெயரில் ஒளிந்துகொண்டு, கடன் நிலுவை தாரர்களை அடிதடியுடன் மிரட்டிப் பணிய வைக்கும் வசூல்ராஜாக்கள். இதில் அறிவழ கன் என்பவரின் அடையாள அட்டை என் வசம் உள்ளது'' எனக் கூறுகிறார் ஸ்ரீதரன்.

மிகுந்த மன உளைச்சலுக்கு உள்ளாகி... ''இதற்குச் சம்பந்தப்பட்ட LIC HFL தலைமை அலுவலகமும், மத்திய நிதியமைச்சகமும், தேசிய மனித உரிமை ஆணையமும் எவ் வித நடவடிக்கை எடுக்கப் போகின்றன'' எனக் கேட்கிறார் ஸ்ரீதரன்.


ஸ்ரீதரன்

2008 பிப்ரவரி, 2008 மார்ச் மாதங்களுக் கான காசோலைகளை Back Office in-charge, LIC-HFLஇன் மதுரை அதிகாரி, வங் கிக்கு அனுப்பாமல் இருந்துவிட் டார். (இதற்கான ஆதாரங்கள் ஸ்ரீதரன் வசம் உள்ளன). வசூல் ராஜாக்கள் வந்துபோன பத்து நாட்களில், குறிப்பிட்ட அந்த இரண்டு செக்குகளும், ஸ்ரீரங்கம் ஸ்டேட் வங்கியில் கலெக்‌ஷன் ஆகி, LIC HFLக்கு சேர்ந்துவிட் டன.

நேரில் முறையிடச் சென்ற ஸ்ரீதரனை ரெக்கவரி ஆஃபீசர் நர் மதா, ''இதெல்லாம் நீங்க ஏன் விசாரிக்கறீங்க?'' என்று சற்றுக் கடுமை காட்டினார்.

சம்பந்தப்பட்ட திருச்சி LIC HFL அலு வலகத்துக்குச் சென்று விசாரித்தால், ''பாதிக் கப்பட்டவரை எழுத்து மூலமாக எழுதித் தரச் சொல்லுங்கள். சம்பந்தப் பட்டவர்களை விசாரித்து, துறை ரீதியாக பதில் தரு கிறேன்!'' எனக் கூறினார், புதி தாகப் பொறுப்பேற்றிருக்கும் ஏரியா மேனேஜர் சத்தியநாரா யணன். கேலக்ஸி சர்வீசஸின் சீஃப் ஆன கார்த்திகேயன், ''சம் பந்தப்பட்ட இரண்டு நபர்கள் தற்போது என்னிடம் வேலைக்கு இல்லை. LIC HFLல் டியூ கட்டாத கடன் தவணைதாரர்களைச் சந்தித்து அவர்களைப் பணம் செலுத்தும்படி வைப்பதற்காக, ஒப்பந்த அடிப்படையில் நியமிக்கப்பட்டிருப்பவர்கள் நாங்கள்!'' என ஒத்துக் கொண்டார். நமக்கோ, இனி இது தொடராமல் இருக்க வழிமுறைகளை அரசு நெறிப்படுத்த வேண்டும்'' என்பதுதான் அவசர அவசியம்.

செய்தி, படங்கள்: இந்திரா மணாளன்






# வாழ்வைக்

''கயிறு திரிக்கறதுல ஒரு குடும்பத்துல உள்ள அத்தினி பேரும் இறங்கி வந்து வேலை பார்க்கணும். அப்பத்தான் அந்த வூட்டுக்குக் கொஞ்சம் நல்ல கூலி கெடைக்கும். என்னோட குடும்பத்தை எடுத்துக்கிட்டா, ஏழு பேரு வேலை செய்றோம். நான், என்னோட மனைவி, அப்புறம் என் அக்கா-தங்கைங்க மூணு பேர், வயசான என்னோட அப்பா-அம்மா. ஒரு மிஷினுக்குக் கொறைஞ்சது மூணு பேரு வேணும். ஒரு நாளைக்கு ஒரு மிஷின்ல, ஒரு பண்டல் நாருதான் கயிறு திரிக்க முடியும். கொஞ்சம் வெரசா வுட்டா பிரி அந்து போயிடும். வேகமும் இருக்கணும்; நிதானமும் இருக்கணும். தனிப்பட்ட ஆளுக்கு எம்பது ரூபா கூலி கெடைக்கும். அம்புட்டுதான்!'' என்கிறார் சூரமங்கலம் மோகன்.

ஓமலூர், மேட்டூர், ஆத்தூர், வாழப்பாடி போன்ற பகுதிகளிலும், தர்மபுரி மாவட்டத்தில் தொப்பூர் சுற்றியுள்ள கிராமங்களிலும், நாமக்கல் மாவட்டத்தில் ராசிபுரம், நாமகிரிப் பேட்டை பகுதிகளிலும், தென்னை நார் கயிறு திரிப்பதில் ஏராளமானவர்கள் ஈடுபட்டு வருகின்றனர். வடக் கயிறு, இரட்டைப் பிரி கயிறு உட்பட பத்து வகையான கயிறுகளை அவர்கள் உற்பத்தி செய்கின்றனர்.

''தமிழ்நாட்டிலேயே சேலம் மாவட்டத்தில்தான், தேங்காய் நார் கயிறு அதிகளவு உற்பத்தி செய்யப்படுகிறது. சேலத்துக்கு இது நூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்ட தொழில். பல பிரிவுகளில் இதன் தொழிலாளர்கள் இயங்கி வருகின்றனர். தேங்காய் மட்டையை நாராக மாற்றி பண்டல் கட்டுவது. அந்த நார் பண்டலை பல வகைகளில் கயிறுகளாகத் திரிப்பது. திரிக்கப்பட்ட கயிறுகளை, மண்டிகளுக்குத் கொண்டு வருவது. பின்னர் அவற்றில் தரம் பிரித்து, ஒழுங்குபடுத்தி கயிறு கட்டுகளாக ஆக்குவது. அதற்கு மேல் அவற்றை ஆர்டரின் பேரில் வட மாநிலங்களுக்கு அனுப்பி வைப்பது. சேலத்தில் மட்டும் இதுபோன்ற மண்டிகள் சுமார் இருநூறுக்

# கட்டும் கயிறு!

கும் மேலாக இயங்கி வருகின்றன. கைத் தறி துறை போலவே, கயிறு திரிக்கும் தொழிலும் தற்போது நலிவடைந்து வரு கிறது. மத்திய அரசின் கயிறு நல வாரி யத்தின் தலைமை அலுவலகம் கொச்சி யிலும், அதன் துணை அலுவலகம் பொள் ளாச்சியிலும் இயங்கி வருகின்றன. அது போல சேலத்திலும் கயிறு நல வாரியத்தி னைத் தமிழக அரசு ஏற்படுத்த வேண்டும்'' எனக் கூறுகிறார் சேலம் மாவட்ட கயிறு வர்த்தகச் சங்கத் தலைவர் பெரியசாமி.

சேலத்திலிருந்து அனுப்பப்படும் கயிறுகளுக்கு, வட மாநிலங்களில் நல்ல மவுசு. சேலம் மாவட்டத்தில் மட்டும் கயிறு திரிப்பது மற்றும் அதன் தொடர்பான வேலைகளில், சுமார் ஒரு லட்சம் பேர் ஈடுபட்டுள்ளனர். சாலையோர மரத்தடி களின் நீண்ட நிழல் பகுதிகளில், அவர்கள் கயிறு திரிக்கும் வேலைகளில் ஈடுபட்டிருப் பதைப் பார்க்கலாம். 'ஆண்டாண்டு கால மாக கயிறு திரித்து வருகிறோம். அதனாலே எங்கள் குடும்பங்களின், வயிறு வளர்த்து வருகிறோம்' என்கின்றனர்.

''எம் பேரு பாக்கியம். ஊரு ரெட்டிய பட்டி. பதினஞ்சு வருஷமா இந்த வேலை பார்த்து வர்றேன். சூரியனுக்கு நேரா வெயி லடிக்கிறதுக்கு முன்னாடி வேலைக்கு வந் துடுவோம். காலம்பற வெள்ளென வந்தாத் தான் இந்த வேலை கூடி வரும். ரெண்டு மணி நேரம் கழிச்சு, கொண்டாந்த கஞ்சிய நாலு மொடக்கு குடிச்சிட்டுத் திரும்பவும் கயிறு திரிக்க வந்து நின்னுடுவோம். சாயந்தரம் நாலு மணிக்கெல்லாம் வேலைய முடிச்சுட்டுக் கிளம்பிடுவோம். ஏன்னா, அதுக்குள்ளார உடம்பே அசந்து போயிரும். பிரி வுட்டுட்டுப் போவும் போது பின்னாடியே நடந்து போவணும். அதைக் கயிறா முறுக்கும்போது தறியை நோக்கி வேகமா ஓடி வரணும். உடம்பு அசந்து போவுமா இல்லியா?'' எனக் கேட்கிறார் பாக்கியம்.

''எனக்கு நெகா (விவரம்) தெரிஞ்ச நாள்லேந்து கயிறு திரிக்கிறேன். பள்ளிக் கூடம் பக்கம் எட்டியே பார்க்கலை. வீட்ல அவுங்களும் ஸ்கூலுக்கு அனுப்பலை. எனக்கும் அங்கன போயி நாலு எழுத்து கத்துக்கணும்னு தோணலை. ஏன்னா, நான் பொறந்ததுலேருந்து எங்க வூட்ல அத்தினி கஷ்டம். எனக்கு இப்ப வயசு இருபத்தஞ்சு ஆவுது. கயிறு திரிச்சு... கயிறு திரிச்சு என் உடம்பும் கயிறாட்டம் மெலிஞ்சு போச்சு. என்ன இதுல கண்ட பலன்னா... நைட்டானா வயிறு நெறைய சோறு தின்னுட்டு, சொகமாகத் தூங்கிப் போறோம். இது ஒண்ணு தான் நாங்க கண்ட பலன். மறுநாள் அதிகாலையில் எந்திரிச்சு தூக்குச் சட்டிய ரொப்பிக் கிட்டு இங்கன வந்துடுவோம்!'' என்று யதார்த்த மாகப் பேசுகிறார் செல்வி.

**செய்தியும், சித்திரங்களும்: புதியவன்**

* செல்வி



* பெரியசாமி



* மோகன்



விஜயா கிருஷ்ணமூர்த்தி



# ஆன்டிக்

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, என்னுடன் பொறியியல் கல்லூரியில் ஒன்றாகப் படித்த வெங்கட்டைப் பார்க்க, இன்று அவன் வீடு தேடி வந்துவிட்டேன். கேட்டைத் திறந்துகொண்டு சென்ற நான், வாசல் கதவைப் பார்த்துப் பிரமித்தேன். வேலைப்பாடு நிறைந்த கதவு. அழைப்புமணியை அழுத்தியதும் வெங்கட்டே கதவைத் திறந்தான். ''வா சுந்தரம். இது அந்தக் காலத்துக் கதவு. சுமார் இருநூறு வருடங்கள் பழைமையானது. என் மனைவிக்கு ஆன்டிக் கலெக்ஷன் ஒரு ஹாபி. காரைக்குடிக்கே சென்று வாங்கி வந்தாள்,'' என்றான் பெருமையுடன். .

வீட்டைச் சுற்றிக் காட்டுகிறேன்னு ஒவ்வொரு இடமாக அழைத்துச் சென்றான். சாப்பிடும் மேஜையின் நான்கு கால்களிலும் யானையின் உருவம். ''இதுவும் அந்தக் காலத்து மேஜைதான்'' என்றான் வெங்கட். ஸ்டோர் ரூமிலும் பித்தளை, வெண்கலப் பாத்திரங்கள் வரிசையாக கொலுவில் வைப்பது போல் வைக்கப்பட்டிருந்தன. ''சுந்தரம், இதெல்லாம் அந்தக் காலத்துப் பாத்திரங்கள். அந்தக் காலத்துப் பொருட்கள் எங்கு கிடைத்தாலும் வாங்கிவந்து விடுவாள்'' என்றான் வெங்கட். நானும் பதிலுக்கு ''ஓல்டு இஸ் கோல்ட் இல்லையா?'' என்றேன்.

கூரை வேயப்பட்ட பால்கனியில் கொள்ளை அழகுடன் ஓர் ஊஞ்சல். அங்கு இருந்த ஒவ்வொரு பொருளும் அந்தக் காலக் கைவினைக் கலைஞர்களின் திறனைப் பறைசாற்றுவதாக இருந்தது.

''சுந்தரம், நீ வரப் போகிறாய் என்று என் மனைவியிடம் சொன்னேன். அவளுக்கும் வீட்டில் இருந்து உன்னை உபசரிக்க வேண்டும் என்ற ஆசைதான். ஆனால் பார், அவள் லேடீஸ் க்ளப் காரிய தரிசி. இன்று முதியோர் இல்லத்துக்கு உதவி செய்ற ப்ரோக்ராம்ங்கறதால், அவள் வெளியே போக வேண்டிய கட்டாயம்'' என்றான் வெங்கட். ''அதனால் என்னப்பா'' என்றேன் நான்.

அதுவரை அவனிடம் கேட்க நினைத்த கேள்வியைக் கேட்டுவிட்டேன். ''வெங்கட், உன் அம்மா எங்கே? வெளியூர் போயிருக்கிறாங்களா?'' ''அம்மாவுக்கு என்னப்பா, கிராமத்தில் சௌக்கியமாக இருக்கிறாள். கொஞ்ச நாட்கள் என்னுடன்தான் இருந்தாள். என் அம்மா இங்கு இருப்பது என் மனைவிக்குச் சரிப்பட்டு வரல்லை. அம்மா அந்தக் காலத்து மனுஷி; ஓல்டு ஃபாஷன். கிராமத்துக்கு அனுப்பிட்டேன்'' என்றான்! ●

# சருகுகளின் வரைபடம்

· பாவண்ணன் ·

ஒவ்வொரு மரத்தின்கீழும்
உதிர்ந்து கிடக்கும் இலைகள்
எம்பிஎம்பிச் சுழன்றாடுகின்றன
பள்ளிச்சிறுமிகள்போல

கைவீசி அலைவதிலும்
தரையில் புரண்டு உருள்வதிலும்
அந்தரத்தில் சிலகணங்கள் நீந்திவிட்டு
பட்டம்போல இறங்குவதிலும்
சிறுமியின் சாயல் சுடர்விடுகிறது
அந்தத் துள்ளல்
அந்த ஆனந்தம்
பூங்காவில் இருப்பவர்களை வசீகரிக்கிறது

ஓர் இளம் ஆசிரியையாக மாறிவிடும்
காற்றின் அன்புச் சொற்களுக்கு
கட்டுப்படுகிறது இலைக்கூட்டம்

ஒவ்வொரு மரத்தடியும் வகுப்பறையாக
ஒவ்வொரு வகுப்பிலும் கணக்கற்ற சிறுமிகள்

கொண்டாட்டத்தில் சிரிக்கும் சிறுமிகள்
சோர்வில் அமர்ந்த சிறுமிகள்
மௌனத்தில் உறைந்த சிறுமிகள்

ஓசையும் மௌனமும் இணைந்த இன்னிசை
அங்கே ஒலித்துக்கொண்டிருக்கிறது.

# அபலைகள்!

புருஷ சிம்மங்களாகிய நாம், பெண் மயில்களை 'அபலைகள்' என்று சொல்கிறோம். ஸ்திரீகள் தனித்தனியாக இருக்கும்போது அவர்கள் ஒருவேளை உண்மையாகவே அபலைகளாயிருக்கலாம். ஆனால், அவர்களில் இரண்டு பேர் மட்டும் சேர்ந்துவிட்டால், எவ்வளவு பெரிய பெரிய காரியங்களுக்கெல்லாம் காரணபூதமாகிறார்கள் என்பதைக் கவனிக்கும்போது, அவர்களை 'அபலைகள்' என்றழைப்பது சரியா என்றே சந்தேகம் உண்டாகிறது.

அப்படிப்பட்ட அபலைகளில் இரண்டு பேரின் கதையை இங்கே எழுத உத்தேசித்திருக்கிறேன்.

அவர்களில் ஒருத்தியின் பெயர் லலிதாங்கி; மற்றொருத்தியின் பெயர் கோமளாங்கி. இவ்விரு பெண் கொடிகளும் அயல் வீட்டுக்காரிகளாகி இரண்டு முழு தினங்கள் ஆகியிருந்தன. மதுரை வீரன் கோயில் தெருவில் லலிதாங்கி வெகு நாட்களாகக் குடியிருப்பவள்; கோமளாங்கி, அடுத்த வீட்டுக்கு இரண்டு நாட்களுக்கு முன்தான் குடிவந்தவள்.

இந்த இரண்டு நாட்களில் ஒருவரையொருவர் அநேக தடவை பார்க்காததுபோல் பார்த்தார்கள்; ஆனாலும் பேசவில்லை. ''அவள்தான் முதலில் நம்மிடம் பேசட்டுமே!'' என்று லலிதாங்கி நினைத்தாள். ''அந்த ராங்கிக்காரியுடன் நான் ஏன் வலியப் போய்ப் பேச வேண்டும்? அடுத்த வீட்டுக்குப் புதிதாய்க் குடிவந்திருக்கிறாளே என்று பார்த்துப் பேச வந்தாளா, பாருங்கள்!'' என்று கோமளாங்கி தன் கணவனிடம் கூறினாள்.

இரண்டு பேரும் மூன்றாம் நாள் காலையில் குழாயடியில் சந்தித்தார்கள். அங்கு எதிர்பாராதவிதமாய், எவராலும் அறிமுகம் செய்து வைக்கப்படாமலே, அவர்கள் பேசிக்கொள்ள வேண்டியதாயிற்று.

முதலில் பேசியவள் லலிதாங்கி. அவள் பேசிய வார்த்தைகள் பிரம்மதேவனின் கைவேலையைப் பற்றிய ஒரு 'கிரிடிஸிஸ்'மாக அமைந்திருந்தன.

''அடி மூதேவி! முகரக்கட்டையைப் பார்!'' என்றாள்.

''இந்தா, ரொம்பத்தான் குதிக்காதே! யாரைப் பார்த்து மூதேவி என்கிறாய்?'' என்று கோமளாங்கி ஒரு சந்தேகத்தைக் கிளப்பினாள்.

''உன் முகரையைப் பார்த்துத்தான்.

அவள் பேசிய வார்த்தைகள் பிரம்மதேவனின் கைவேலையைப் பற்றிய ஒரு 'கிரிடிஸிஸ்'மாக அமைந்திருந்தன.

பித்தளைக் குடம் கொண்டு வந்த பெருமையல்லவா உன்னை அப்படி இடிக்கச் சொல்லிற்று?'' என்று லலிதாங்கி சந்தேக நிவர்த்தி செய்தாள்.



விஷயம் என்னவென்றால், குழாயடியில் அநேக குடங்கள் தண்ணீருக்காகக் காத்திருந்தன. லலிதாங்கியின் மண் குடத்தில் தண்ணீர் விழுந்துகொண்டிருந்தது. கோமளாங்கி, அடுத்தாற்போல் வேறு யாராவது குடத்தை வைத்துவிடப் போகிறார்களே என்ற அவசரத்தினால், சட்டென்று தன் பித்தளைக் குடத்தைக் குழாயடியில் நகர்த்தினாள். அது லலிதாங்கியின் மண் குடத்தைத் தாக்கவே, அது உடைந்து போயிற்று.

அன்றிரவு கோமளாங்கியின் புருஷன் வீர வியாக்ர ராவ் வீட்டுக்கு வந்ததும், குழாயடியில் நடந்த சம்பவத்தை அவளிடம் அறிந்தார். "சீச்சீ! அடுத்த வீட்டுக்காரர்களிடம் இப்படி ஆரம்பத்திலேயே சண்டை போட்டுக்கொள்ளலாமா? பிசகு உன்மேலேதான் இருக்கிறது. இப்போது நான் போய்க் குடத்தின் விலையைக்




கொடுத்துச் சமாதானம் செய்து கொண்டு வருகிறேன்'' என்று இரண்டு அணாவை எடுத்துக்கொண்டு கிளம்பினார்.

இவர் அடுத்த வீட்டு ரேழியில் நுழைந்த சமயம், லலிதாங்கியின் கணவர் சூரேச்வர லிங் இவரைப் பற்றித் தமது அபிப்பிராயத்தைத் தெரிவித்துக்கொண்டிருந்தது இவர் காதில் விழுந்தது. அதாவது, வீரவியாக்ர ராவின் பெரிய தலைக்குள் இருப்பது அவ்வளவும் மணல் கலப்பில்லாத களிமண் என்றும், அதைக் கொண்டு எந்தக் குசவனும் இருபது மண்குடம் பண்ணிவிடுவானென்றும், அப்படியிருக்க அவன் எப்படித் தன் பெண்டாட்டியை அடக்கி ஆள முடியுமென்றும் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்படிச் சொல்லிவிட்டு அவர் சமையலறையிலிருந்து வெளியில் எழுந்து வந்த சமயம், தாழ்வாரத்தில் வீரவியாக்ர ராவைச் சந்தித்தார். வீர வியாக்ர ராவின் கண்களில் தீப்பொறிகள் பறந்துகொண்டிருந்தன. அத்தீப்பொறிகளின் வெளிச்சத்திலே அவரும் சூரேச்வர லிங்கைக் கண்டார். அதிகம் பேசவில்லை. ஒரே ஒரு வார்த்தைதான் சொன்னார். அதாவது, மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களில் ஓர் அவதாரத்தின் பெயரால் சூரேச்வர லிங்கை அழைத்தார்.

அந்தப் பொறுமையில்லாத மனிதர், ''அடே! யாரையடா பன்றி என்று சொன்னாய்!'' என்று கேட்டுக்கொண்டு, தமக்குத் தாமே சந்தேக நிவர்த்தி செய்து கொண்டவராய், வராகாவதார கோலம் பூண்டு, வீர வியாக்ரத்தைப் பூமி கோளமாகக் கொண்டு, அவருடைய வயிற்றில் ஒரு முட்டு முட்டி, வீட்டு வாசலில் கொண்டு போய்த் தள்ளினார்.

**வீ**ர வியாக்ர ராவ் வாசலில் போய் விழுந்த அதே சமயத்தில், அங்கே கசாப்புக்கடை ஷேக்தாவுது சாகிப் போய்க்கொண்டிருக்கவேண்டுமா? அல்லது அவன் மேலேதான் இவர் விழ வேண்டுமா? கொஞ்சம் அப்பால் இப்பால் நகர்ந்து விழுந்திருக்கக் கூடாதா? அல்லது அந்தச் சந்தர்ப்பத்திலேதானா, ஊரில் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும், தங்கள் தங்கள் கடவுளின் கௌரவத்தைக் காப்பாற்றுவதில் அதிகமான அக்கறை தோன்றியிருக்க வேண்டும்? இதெல்லாம் போகட்டும். சாயபுவின் கையில் அச்சமயம் கத்தி ஒன்று இருந்திருக்க வேண்டுமா? இவ்வாறு கேட்டை, மூட்டை, செவ்வாய்க்கிழமை எல்லாம் சேரவே, வீர வியாக்ர ராவும் கசாப்புக்கடை சாகிபுவும் எதிர்பாராத சந்தர்ப்பத்தில் பலாத்காரமாய் ஆலிங்கனம் செய்து கொள்ள நேர்ந்ததின் விளைவுகள் விபரீதமாயின. வீதிகளில் எல்லாம் ''மாரோ! மாரோ!'' ''குத்து! கொல்லு!'' என்ற கூக்குரல்கள் கிளம்பின.

போலீஸாரால் நிலைமையைச் சமாளிக்க முடியாமல் துருப்புகளைக் கூப்பிட வேண்டியதாயிற்று. ஏழுபேர் மரணமடைந்தனர்; முப்பது பேருக்குப் பலத்த காயம்.

போலீஸ் இலாகாவில் டெபுடி சூபரின்டென்டு குப்பி முகம்மது சாகிபு, இந்தக் கலக விஷயத்தில் சரியான நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லையென்ற கார

ணத்தினால் அவர் சர்க்கிள் இன்ஸ்பெக்டராகக் கீழே தள்ளப்பட்டு, வேறு ஜில்லாவுக்கும் மாற்றப்பட்டார்.

கலகத்தை அடக்கிப் பெயர் பெற்ற காப்டன் பிரௌன் துரைக்குக் கர்னல் பதவி கிடைத்தது.

மேற்படி கலகத்தைப்பற்றி, சட்ட சபையில் 368 கேள்விகள் கேட்கப் பெற்றன. அவற்றுக்குப் பதில் சொல்வதற்கு, கேள்வி ஒன்றுக்கு ரூ.75 - 6 - 5 வீதம் மொத்தம் ரூ.27748 - 1-8 சர்க்காருக்குச் செலவாயிற்று. தேசியத் தலைவர்கள் தொண்டைத் தண்ணீர் 363 குடம் 4 ஆழாக்கு செலவழிந்தது.

ஹிந்து முஸ்லிம்களுக்குள் சமரசம் உண்டுபண்ணுவதற்காக, அகில இந்தியத் தலைவர்கள் வந்துவிட்டுப் போனதற்கு ரூ.18,354 - 12 - 6 செலவு ஏற்பட்டது.

இராணுவத்தின் துப்பாக்கிப் பிரயோகம் நியாயமா என்பது பற்றிச் சர்க்கார் நடத்திய விசாரணைக்காக ரூ.78,750ம், உத்தியோகப் பற்றற்ற விசாரணைக் கமிட்டிக்காக ரூ.6530ம் செலவழிந்தது. சர்க்கார் விசாரணையில், துப்பாக்கிப் பிரயோகம் மிகவும் அவசியமாயிருந்ததென்றும், உத்தியோகப் பற்றற்ற விசாரணையில் துப்பாக்கிப் பிரயோகத்துக்கு அவசியமே இல்லையென்றும் காலதாமதமாக விளங்கின.

இதெல்லாம் ஒரு புறமிருக்க, அந்நகரில் ஸ்ரீமான் வஜ்ராயுத உடையார் என்பவர் முனிசிபல் சேர்மனாயிருந்தார். கோமளாங்கியின் பித்தளைக் குடம் லலிதாங்கியின் மண் குடத்தை உடைத்த அதே சமயத்தில், ஸ்ரீமான் உடையார் அந்தப் பக்கம் போய்க்கொண்டிருந்தார். குழாயைச் சுற்றிலும் இன்னும் முப்பது, முப்பத்தைந்து குடங்கள் கண்காட்சிக்கு வைத்திருப்பது போல் வைத்திருப்பதையும் அவர் கவனித்தார்.

அதே சமயம் அறுபது வயதுக் கிழவர் ஒருவர் எதிரே வந்து உடையாரின் மோட்டாரை நிறுத்தி, "எஜமான் சேர்மனாயிருக்கும்போது இந்தத் தண்ணீர்ப் பஞ்சத்துக்கு ஒரு வழி பண்ணக் கூடாதா? நீங்கள் அமோகமா இருப்பீர்கள். இந்த நகரத்து ஜனங்கள் தலைமுறை தலைமுறையாய் உங்களை வாழ்த்தி வருவார்கள்'' என்றார்.

உடையாருடைய சமையற்காரன், அன்று காலையில் முள்ளங்கி சாம்பார் நன்றாய்ச் சமையல் செய்திருந்தான். ஆகையால் அவர் ஹிருதயம் கருணையினால் நிறைந்து ததும்பிக்கொண்டிருந்தது. எனவே, ஊரில் தண்ணீர்ப் பஞ்சத்தை நிவர்த்தி செய்துவிட்டு மறுகாரியம் பார்ப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டார்.

உடனே, அந்நகரின் வாட்டர் ஒர்க்ஸை விருத்தி செய்வதற்கு ஒரு திட்டம் போட்டுச் சர்க்காருக்கு அனுப்பினார். நேரில் பார்த்து அனுமதி கொடுப்பதற்காகப் பெரிய இன்ஜினியர் வந்து சேர்ந்தார்.

இன்ஜினியருடைய பகல் போஜனத்துக்காகக் கொண்டுவரப்பட்டிருந்த வான்கோழி ஒரு தப்புக்காரியம் பண்ணிற்று. 'கானமயிலாட' என்று மனிதர்கள் சொல்லும் பாட்டில் தன்னை அவமானம் செய்திருப்பதற்குப் பரிகாரம் என்ன என்று, அது உடையார் பங்களாவிலிருந்த காவல்





நாய் 'டைகரை'ப் போய்க் கேட்டது. டைகர், அதற்குப் பரிகாரம் இதுதான் என்று, வான்கோழியின் சிறகுகளைப் பிய்த்தெறிந்து, அதனுடைய உடம்பின் ஒரு பகுதியைத் தன் வயிற்றுக்குள் அனுப்பிவிட்டது. பாக்கியை, டைகரின் சிநேகிதர் மிஸ்டர் மியாவ் தம் வயிற்றுக்குள் அனுப்பி வைத்தார்.

இதன் பயனாக, பெரிய இன்ஜினியரின் சாப்பாட்டுக்கு, வான்கோழி கிடைக்காமல் போயிற்று. இதனால் கோபங்கொண்ட பெரிய இன்ஜினியர், வாட்டர் ஒர்க்ஸ் அபிவிருத்திக்கு அனுமதி கொடுக்காமலே திரும்பிப் போய்விட்டார்.

ஆனால், உடையாரோ முகத்தில் மீசை உடையாராயிருந்தார். 'என்ன ஆனாலும் ஆகட்டும்' என்று வேலையை நடத்திக் கொண்டு போனார்.

சர்க்கார் கோபங்கொண்டார்கள்; சர்க்காருக்குக் கோபம் வந்துவிட்டால் அப்புறம் கேட்க வேண்டுமா? உடையாரைச் சேர்மன் பதவியினின்று நீக்கி, நகர சபையையும் கலைத்துவிட்டார்கள்.

''நல்லவேளை! இருக்கிற குழாய்களையும் மூடாமல் விட்டார்களே!'' என்று நகரவாசிகள் சந்தோஷித்தார்கள்.

**ஸ்ரீ**மான் வஜ்ராயுத உடையார் சட்டசபையிலும் அங்கத்தினராயிருந்தார். அதுவரை சர்க்கார் கட்சியிலிருந்தவர் மேற்கூறிய அநியாயம் பொறுக்க முடியாமல், எதிர்க் கட்சிக்குத் தாவினார். அவருடைய சிநேகிதர்கள் இன்னும் சிலரும் அவரைப் பின்பற்றினார்கள்.

**இவ்வளவுக்கும் மூலகாரணமான கோமளாங்கியும், லலிதாங்கியும் சௌக்யமாய் அதே வீதியில் அதே வீடுகளில் குடியிருந்து வருகிறார்கள்.**

சட்டசபையில் பெரிய குழப்பம் விளைந்தது. எதிர்க் கட்சித் தலைவர், மந்திரிகளின் மேல் 'நம்பிக்கை இல்லாத் தீர்மானம்' கொண்டு வந்தார். மந்திரிகள் தங்களுடைய உத்தியோகத்தைக் காப்பாற்றிக்கொள்வதற்காக ஏறக்குறைய ஒரு வருஷத்துச் சம்பளத்தைச் செலவழிக்க வேண்டியதாயிற்று.

சட்டசபையில் விவாதம் நடந்தபோது, பேச்சுகள் மிகவும் உஷ்ணமாயிருந்தன. மந்திரிகளில் ஒருவர், ''ஜனங்களுக்கு என்ன தெரியும்? ஜனங்கள் சுத்தக் கழுதைகள்!'' என்று சொல்லிவிட்டார். அவர் இவ்வாறு சொன்னதைக் கண்டித்து, எதிர்க்கட்சியினரால் 37 லட்சம் துண்டுப் பிரசுரங்கள் அச்சிட்டு வெளியிடப்பட்டன.

அடுத்த வருஷம் மறு தேர்தல் நடந்தபோது, 'ஜனங்களைக் கழுதைகள் என்று சொன்னவர்களுக்கா வோட்டுக் கொடுப்பீர்கள்?' என்பதே எதிர்க்கட்சியாரின் முக்கிய தேர்தல் மந்திரமாயிருந்தது. மந்திரிக்

கட்சியார் இருந்த இடம் தெரியாமல் முறியடித்து விரட்டப்பட்டனர்.

இந்தத் தேர்தல் சம்பந்தமாக ஏற்பட்ட அவதூறு வழக்குகளில் மட்டும் இருதரப்பிலும் மூன்று லட்சம் ரூபாய் செலவாயிற்று. இன்னும் வழக்குகள் முடிந்த பாடில்லை.

இவ்வளவுக்கும் மூலகாரணமான கோமளாங்கியும் லலிதாங்கியும், சௌக்யமாய் அதே வீதியில் அதே வீடுகளில் குடியிருந்து வருகிறார்கள். மறுநாளே கோமளாங்கி, ஒரு புது மண்குடம் வாங்கிக் கொண்டு லலிதாங்கி வீட்டுக்குப் போய் அவளிடம் கொடுத்தாள். லலிதாங்கி மிகவும் சந்தோஷமடைந்து, புருஷர்கள் சுத்த மூடங்களென்றும், அவர்கள் ஏன் ஸ்திரீகளின் அந்யோந்நியத்துக்குக் குறுக்கே நிற்கிறார்களென்பது தனக்குத் தெரியவில்லையென்றும் கூறினாள். இருவரும் அன்று முதல், ஒருவருக்கொருவர் பிராண சிநேகிதமா இருப்பதாக வாக்குறுதி கொடுத்துக்கொண்டார்கள்.

இன்றுகூட நீங்கள் மதுரை வீரன் கோயில் தெருப் பக்கம் போனால், லலிதாங்கி முதலில் கோமளாங்கியின் குடத்தில் தண்ணீர் பிடித்துக் கொடுத்து விட்டு, பிறகு தன் குடத்தில் தண்ணீர் நிரப்புவதையும், இருவரும் இடுப்பில் குடத்துடன் கைகோத்துக்கொண்டு வீடு நோக்கிப் போவதையும் பார்க்கலாம். ஒட்டுக்கேட்டால், குழாயடியில் காத்திருக்கும் மற்ற ஸ்திரீகளின் குணாதிசயங்களைப் பற்றி அவர்கள் பேசிக்கொண்டு போவதையும் அறியலாம்.

தங்களால் ஒரு பெரிய முதல்தரக் கலகம் நடந்ததைப் பற்றியாவது, ஓர் அரசாங்கம் மாறி இன்னொரு அரசாங்கம் ஏற்பட்டதைப் பற்றியாவது, துருப்பிடித்த ரூபாய்கள் லக்ஷக்கணக்கில் உல்லாசமாக வெளியே நடமாடியதைப் பற்றியாவது இவர்களுக்கு ஏதாவது தெரிந்திருப்பதாக அவர்களுடைய பேச்சிலிருந்து துளியும் புலப்படாது.

யோசித்துப் பார்க்கும்போது, ஸ்திரீகளை 'அபலைகள்' என்று சொல்வது பொருத்தமென்றே தோன்றுகிறது. தங்கள் பலத்தை தாங்கள் அறியாதவர்களும் ஒரு விதத்தில் அபலைகளே அல்லவா? ●






''இரண்டு மாதத்துக்கு முந்தி, நூறு ரூபாய் கடன் கொடுத்தேனே... மறந்திட்டியா?''

''சே...சே...நேத்துக்கூட நீ தெரு முனையில வர்றதைப் பார்த்துட்டு டக்குன்னு பக்கத்துச் சந்து வழியாப் போயிட்டேனே. மறந்தா அப்படிச் செய்வேனா!''

- ஆதினமிளகி வீரசிகாமணி

# மும்பை



★ ராஜ் தாக்கரே

மும்பையில், ஒரு போராட்டத்தை ஆரம்பித்திருக்கிறது, ராஜ் தாக்கரேவின் மகாராஷ்டிரா நவ நிர்மாண் சேனா. பம்பாய் என்ற பெயரை மும்பை என்று மாற்றியபின், இன்னமும் தங்கள் பெயரில் பம்பாயை விடாமல் எப்படிப் பிடித்துக்கொண்டிருக்கலாம்? என்பதுதான் இவர்களின் போராட்டம். சின்ன நிறுவனங்கள் எல்லாம் எதற்கு வீண் வம்பு என்று பெயர் மாற்றம் செய்துவிட்டார்கள். அந்த வரிசையில் ராஜ் தாக்கரேவின் லேட்டஸ்ட் டார்கெட், மும்பையின் பிரபலமான 'பாம்பே ஸ்காட்டிஷ் ஸ்கூல்' பள்ளிக்கூடத்தின் பெயரிலிருந்து பாம்பே என்ற பெயரைத் தூக்கிவிட்டு, மும்பை என்று மாற்ற வேண்டும் என்கிறார் ராஜ் தாக்கரே. பத்திரிகைகளில் அறிக்கைகள் மூலமும், ஆசிரியருக்குக் கடிதங்கள் வாயிலாகவும் பெரிய பட்டிமன்றமே நடந்துகொண்டிருக்கிறது. பள்ளி நிர்வாகம், மாற்றத்துக்கு இன்னமும் சம்மதம் தெரிவிக்கவில்லை. இப்போது ராஜ்தாக்கரேவுக்கு இது பெரிய ஈகோ பிரச்னையாகி இருக்கிறது!

• • •

தமிழ்நாட்டுக்கு இட்லி சாம்பார் போல, மும்பைக்கு வடா பாவு. பாவு பாஜிக்குப் பயன்படுத்தும் ரொட்டியை நடுவிலே கட் பண்ணிப் பிரித்து, அதன் உள்ளே உருளைக் கிழங்கு போண்டாவை வைத்துவிட்டால், அதுதான் வடா பாவு. மும்பைவாசிகளுக்கு மிகவும் பிடித்த வடாபாவுக்குள் போண்டாவுடன் அரசியல் மசாலாவும் கலந்து, பெரிய சர்ச்சையை ஏற்படுத்தி இருக்கிறது. சிவசேனைக்காரர்கள் தாங்கள் பெரிதும் மதிக்கும் சத்ரபதி சிவாஜி பெயரால் வடாபாவுக்கு 'சிவ் பாவு' என்று பெயர் சூட்டிவிட்டார்கள்! சிவசேனை இப்படிச் செய்து மண்ணின் மைந்தர்களைக் கவர நினைத்தால், மற்றவர்கள் சும்மா பார்த்துக்கொண்டிருப்பார்களா? சிவாஜி பெயரை வடாபாவுக்குச் சூட்டி, அவரை இழிவு படுத்திவிட்டார்



கள் என்று அறிக்கை விட்டார்கள். சிவாஜியின் மரியாதைக்குரிய சம்பாஜி ராவைக் கேவலப்படுத்தும் விதமாக 'சம்பா பீடி' விற்கப்படுகிறதே! அதை எதிர்த்துப் போராடாமல், வடா பாவுக்கு வந்துவிட்டார்கள்' என்பது சேனாவினருடைய வாதம். இந்தச் சர்ச்சைகளால் துளியும் பாதிப்பு இல்லாமல், மும்பை எங்கும் வடா பாவு கன ஜோராக விற்றுக்கொண்டிருக்கிறது!

• • •

# மசாலா



அண்மையில் மும்பையின் குடும்ப கோர்ட் ஒன்று, ஒரு விவாகரத்து வழக்கில் விசித்திரமான பிரச்னையைச் சந்தித்தது. தம்பதிகள் வளர்த்த செல்ல நாய், யாரிடம் இருக்க வேண்டும் என்பது பெரிய பிரச்னையாகிப் போனது! கணவன், ''நான்தான் பணம் கொடுத்து நாயை வாங்கிக்கொண்டு வந்தேன். எனவே, நாய் என்னிடம்தான் இருக்க வேண்டும்'' என்று வாதிட, மனைவி தரப்பு, ''பணம் கொடுத்து வாங்கிவிட்டால் போதுமா? தினமும் அதற்குச் சாப்பாடு போட்டு, கவனித்துக்கொண்டது நான்தான். உடம்பு சரியில்லாத சமயத்தில் டாக்டரிடம் அழைத்துப் போனதும் நானே! எனவே நாய் எனக்குத்தான்!'' என்று வாதிட்டது. நம் நாட்டு சட்டப் புத்தகங்களில் இந்த விஷயம் குறித்து, சட்டம் எதுவும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. வழக்கில் தீர்ப்பு விரைவில் வரும் என எதிர்பார்க்கப்படுகிறது!

• • •

மும்பை பெருநகர வளர்ச்சி நிறுவனம் ஒரு சட்டம் போட்டிருக்கிறது. கட்டடங்கள் கட்டுவதற்காக ஒரு மரத்தை வெட்டினால், மூன்று புதிய மரக்கன்றுகளை நட வேண்டும். மேலும், மரம் வெட்டப்பட்ட முப்பது நாட்களுக்குள் புதிய மரக்கன்றுகளை நட்டு, ஒரு மரக் கன்றுக்கு 2000 ரூபாய் என்று அரசிடம் டெபாசிட்டும் செய்ய வேண்டும். இரண்டு வருடங்கள் கழித்து, நட்ட கன்றுகள் நன்றாகப் பராமரிக்கப்பட்டு, திருப்திகரமாக வளர்ந்திருந்தால் செலுத்திய டெபாசிட் தொகை 2000 ரூபாய் திருப்பித் தரப்படும். சம்பந்தில் இந்தத் திட்டம் எப்படிச் செயல்படுகிறது என்ற விவரம், தகவல் அறியும் உரிமை சட்டத்தின் கீழ் தெரிய வந்தது. அதில் இரண்டு உண்மைகள் வெளிச்சத்துக்கு வந்தன. முதலாவது, சுமார் 25 ஆயிரம் மரங்கள் வெட்டப்பட்டு, அவற்றுக்கு ஈடாக மரக்கன்றுகள் நடப்படவே இல்லை! வேருடன் நீக்கப்பட்டு, வேறு இடங்களில் மீண்டும் நடப்பட்டதாக சொல்லப்பட்ட 2000 மரங்களில் ஒன்றுகூட துளிர்க்கவில்லை! இது ஒரு பக்கம் என்றால், இந்தத் திட்டத்தின் மூலமாக அரசாங்கத்துக்கு இதுவரை சுமார் 9 கோடியே 25 லட்சம் ரூபாய் வருமானம் கிடைத்திருக்கிறது. ரியல் எஸ்டேட் கம்பெனிகளுக்கு மரத்துக்கு 2000 ரூபாய் என்பது ஜுஜுபி என்பதால், இரண்டு வருடங்கள் கழித்து டெபாசிட் பணத்தைத் திரும்பக் கேட்டு அவை விண்ணப்பிப்பதுகூட இல்லை!



–எஸ்.சந்திரமௌலி

# 'தமாஷ்' காலனி



"நீங்க எனக்கு வைர நெக்லஸ் வாங்கிட்டு வந்த மாதிரி கனவு கண்டேன்!"

"அதைக் கழுத்துல போட்டு அழகு பார்த்த மாதிரியும் கனவு கண்டுக்கோ!"

- எஸ்.ஏ.கேசவன்




"நம் கட்சிக்கு, தேர்தலுக்கு நிறைய பணம் தேவைப்படு கிறது?"

"அதற்காக, நம்ம கட்சியை சேட்டு கடையில் அடமானம் வைக்கலாமான்னு கேட்கறது கொஞ்சம் ஓவர் தலைவரே...!"

- வெ.ராம்குமார்



"போலி மருத்துவர்கள் பற்றி புகார் கொடுத்தால், அரசு அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக் கும்!"

"யார் மீது? புகார் கொடுத் தவர்கள் மீதா?"

- து.பூவராகன்



''ரொம்ப முன்கோபக்காரனா இருந்த நான், இப்பல்லாம் ரொம்ப பொறுமை சாலியா மாறிட்டேன்...''

''கல்யாணம் ஆகியிருக்கும். அதானே...?''

- சீர்காழி வி.ரேவதி

''புளி ரசம் வைப்பதா? மிளகு ரசம் வைப்பதா? என்று மனைவிக்கும் அம்மாவுக்கும் சண்டை.''

''நீங்கள் என்ன செய்தீர்கள்?''

''இருவருக்கும் சமரசம் செய்து வைத்தேன்.''

- கொ.பழனியப்பன்





''ஏன் நீ தூக்கத்திலே அழுதே?''

''கனவுல டீ.வி. சீரியல் ஓடுச்சுங்க...!''

- லெ.நா.சிவக்குமார்

# பூமனம்!



"குடிடா கண்ணு!''

காம்ப்ளானைக் கலந்து, கடைசிப் பையன் நந்து முன்னால் வைத்தாள் சுசிலா. பையன் கண்கள், மேல் நோக்கியே செருகிப் போய் இருந்ததைப் பார்த்ததும் புரிந்துகொண்டாள்.

''பூக் கப்புதானே? கிடையாது,'' என்றாள் உறுதியாக. ''நூறுவாட்டி சொல்லியாச்சு, அது விருந்தாளிங்க வந்தா பரிமாற வெச்சிருக்கிறது. ஒரு செட்டா இருக்கு. எடுத்தா அழுக்காயிடும்!''

''ஒரு கப்தானேம்மா?'' வழக்கமான கெஞ்சலை ரீப்ளே செய்தான் நந்து.

''த பாரு. அதே பல்லவியைப் பாடாதே. ஒரு கப் அழுக்காயிட்டா அது தனியே தெரியும். செட்டே வேஸ்ட்டாயிரும். அதும் சொல்லியிருக்கேனா இல்லியா? எத்தனை வாட்டி சொன்னாலும் உனக்கு ஏற மாட்டேங்குது...''

ஷெல்ஃபில் அடுக்கி வைத்திருந்த பூக் கப்பைப் பார்த்தபடியே காம்ப்ளானைப் பருகினான் நந்து. கடைவாய் ஓரமாய் வழிந்தது.

''ஐயையோ புதுச் சட்டையைக் கறையாக்கிட்டியே! கையில் இருக்கிறதைப் பார்த்துக் குடிக்க வேண்டியதுதானே? ரெண்டு மொத்தினாத்தான் உருப்படுவே...''

''என்னடா கண்ணா, என்ன வேணும் உனக்கு?'' அவன் கிராப்பைத் தடவியபடியே வசந்தன் கேட்க, விஷயத்தைச் சொன்னான் நந்து.

''அதில்தான் குடிப்பேன்னு அடம் பிடிக்கிறான்க!''

''இவ்வளவுதானா விஷயம்? சொல்றமாதிரி சொன்னா புரிஞ்சிக்கிறான்!'' என்று வசந்தன் தன் வழக்கமான பாணியில் சொல்லலுற்றான்.

''இத பாருடா, நம்ம வீட்டுக்கு யாராவது விருந்தாளிங்க வருவாங்க இல்லியா? அவங்களுக்குக் காஃபி, டிபன் கொடுப்போம் இல்லியா? அப்ப அவங்களுக்குப் பழைய தம்ளரில் கொடுத்தா நல்லாயிருக்குமா? அதான் நல்லதா புதுசா ஒரு பிங்கான் கப் செட் வாங்கி வெச்சிருக்கோம். அதில ஒண்ணு மட்டும் எடுத்து உபயோகிச்சா பழசாயிரும் இல்லியா? அப்புறம் செட்டே வேஸ்ட்டாயிரும் இல்லியா...?'' என்று அவன் அம்மா சொன்னதையே இன்னொரு மொழியில் சொல்ல...

''சரிப்பா, மூணு, நாலு பேர்தானே வர்றாங்க? ஆறு கப் இருக்கேப்பா?''

''ஆறு பேர் வந்தா, ஆறு கப் வேணுமில்லியா?''

''அப்பகூன்னா, ஏழு பேர் வந்தா என்ன பண்ணுவீங்களாம்?''

அவ்வளவுதான், வசந்தனுக்குப் பொறுமை எல்லை கடந்துவிட்டது.

''டேய் சொன்னா கேட்கணும். எடுக்கக் கூடாதுன்னா எடுக்கக் கூடாதுதான்.''

நியாயமான கேள்விதானே நான் கேட்டது? அதற்கு ஏன் அப்பா இப்படி எரிந்து விழ வேண்டும்? புரியவில்லை சிறுவனுக்கு.

அடுக்கியிருந்த பூப்போட்ட கப்புகளைப் பார்த்தபடியே அகன்றான் நந்து.

அடுத்த வாரத்தில் ஒருநாள்.

வசந்தனின் முன்னாள் மானேஜர் பொன்னம்பலம், கன்னியாகுமரி வந்தவர் அப்படியே இவர்கள் வீட்டுக்குக் குடும்பத்துடன் விஜயம் செய்தார்.

சரியாக ஆறு பேர்.

அவரது கடைசிப் பையன் மிதுன். நந்துவைவிட ஒரு வயது அதிகம் இருக்கும்.

மிதுன் அந்தப் பூப்போட்ட கப்பில் பால் குடிப்பதையே ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான் நந்து. இவன் டம்ளரி லும் அதே பால்தான் இருந்தது என்றாலும், அவன் ஏதோ தேவலோக அமிர்தத்தை அருந்துவதைப் போல இருந்தது இவன் பார்வை.

விழுந்து விழுந்து உபசரித்தார்கள்.

மத்தியானம் சாப்பிடும்போது...

மிதுன் பாயசத்தை அந்தப் பூக்கப் பிலிருந்து இலையில் விட யத்தனித்த போது, கை சற்றுத் தவறி கீழே விழுந்து நொறுங்கியது கப்.

''ஐயையோ உடைஞ்சு போச்சே? என்னடா மிதுன் பார்த்து எடுக்கக் கூடாதா?'' என்று அவன் அப்பா செல்ல மாகக் கடிந்துகொண்டார்.

அதற்குள், ''அட விடுங்க, சின்னப்

# கே.பி.ஜனார்த்தனன்

பையன், கை நழுவத்தான் செய்யும். சகஜம் தானே? விடுங்க. குழந்தையைப் போய்க் கோபித்துக்கொண்டு!'' என்று வசந்தன் பரிந்துகொண்டு வந்தான்.

அழுக்காகி விடக் கூடாது என்பதற்கே அத்தனை கவலைப்பட்டார்களே அப்பா வும் அம்மாவும்! இப்ப கப் உடைஞ்சே போச்சே? என்ன செய்யப் போகிறார்கள்?' என்பதைப் பதைப்புடன் பார்த்திருந்த நந்துவுக்கு, ஏமாற்றம் ஒருபுறம்; ஆச்சரியம் மறுபுறம்.

உடைந்த கப்பைப் பற்றி யாருமே கவ லைப்பட்ட மாதிரி தெரியவில்லை. ரொம்ப சகஜமான ஒரு விஷயம் மாதிரி, ஈரக்கையைத் துடைத்த மாதிரி நடந்து கொண்டதைத் தாங்க முடியவில்லை அவனால்.

அன்றிரவு விருந்தினர்கள் ரயிலுக்குப் புறப்பட்டுப் போவது வரை யாருடனும் எதுவும் பேசாமல் ஒதுங்கியிருந்தான். அந்த நினைப்பிலேயே தூங்கிப்போனான்.

மறுநாள் காலை.

நந்து மெள்ளக் கண் விழித்தபோது...

வழக்கமாக காலையில், அவன் குடிக்கப் பால் எடுத்து கட்டிலருகே வைத் திருப்பாள் அம்மா.

அன்றைக்கும் வைத்திருந்தாள். நந்து ஆச்சரியத்துடன் பார்த்தான்.

பூ போட்ட கப்!

நம்ப இயலாமல் அதைக் கையில் எடுத்துப் பார்த்தான்.

''என்ன பார்க்கிறே? உனக்குத்தான்''

அந்தப் பூக்கப்பைப் பார்த் தான் நந்து.

''வேணாம்மா. எப்பவும் போல எவர்சில்வர் கப் பிலேயே கொடும்மா,'' என்றான் தீர்மான மாக. ○















# ஆயுத எச்சரிக்கை

***123 - இந்தியாவே ஓடாதே! நில்!! - வழக்கறிஞர் கே.எஸ்.இராதா கிருஷ்ணன், பொதிகை - பொருநை - கரிசல், 4/359, ஸ்ரீ சைதன்யா அவின்யூ, அண்ணா சாலை, பாலவாக்கம், சென்னை - 600 041. விலை ரூ.40/-***

இந்திய - அமெரிக்க அணு ஒப்பந்தம் 123 பற்றி விவரித்துச் சொல்லும் நூல். இந்தியாவின் நடுநிலைக் கொள்கைக்கும் இறையாண்மைக்கும் சோதனை வந்து விடுமோ என்ற அச்சத்தில், தம் கருத்தைப் பதிவு செய்துள்ளார் ஆசிரியர். நாட்டின் நலன் காக்க, சூழ்ந்து வரும் ஆபத்துகளைத் தடுக்க, எச்சரிக்கை செய்யும் ஆயுதமாக இந்நூலை முன் வைக்கிறார்.

***சந்திப்பு - மைபா, தென்திசை, 19, ஸ்ரீநிவாச ரெட்டி சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.70/-***

தமிழக அரசியல் தலைவர்களுடைய பேட்டிகளின் தொகுப்பு. தமது அன்பான அணுகுமுறையால், எதிரெதிர் துருவ தலைவர்களையும் சந்தித்து பேட்டி கண்டுள்ளார். அஞ்சாமல் கேள்விக் கணைகளைத் தொகுத்து, பல அரிய தகவல்களை நூலாசிரியர் சுவாரஸ்யத்துடன் வழங்கியுள்ளார்.

***முகவரி இல்லாத மனிதனும் முகமே இல்லா கடவுளும் - கவிஞர் மு.நந்தா, சிந்தனாலயா வெளியீடு, 356, ராஜாத்தி கலைஞர் நகர், மண்ணிவாக்கம் - வண்டலூர், சென்னை - 48. விலை ரூ.75/-***

ஆன்மிக, தத்துவக் கட்டுரைகள் அடங்கிய புத்தகம். குட்டிக் கதைகள், சான்றோர்களின் தத்துவ முத்துக்களுடன் தம் கருத்துகளை எளிமையான நடையில் கட்டுரைகளாக அளித்துள்ளார். ஆன்மிகத் தேடல் கொண்டவர்க்கு, தத்துவ தரிசனங்களை அறியச் செய்யும் முயற்சி!

***உடைமுள் - முத்துவேல், குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.50/-***

கிராமப் பேச்சு மொழி நடையில் எழுதப்பட்டுள்ள கவிதைகளின் தொகுப்பு. சிறுகதைகளாகப் படைக்கப்பட்டுள்ள கவிதைகள், உள்ளம் கீறி உதிரம் கொட்டச் செய்யும், உண்மை முட்கள்! சமூக அவல வாழ்க்கையை அஞ்சாமல் வெளிப்படுத்தியிருக்கிறார்.

**- மித்ரா**



# அன்பின் பூரணம்!

எத்தனைக்கெத்தனை அன்பு வைத்தோமோ, அத்தனைக்கத்தனை துன்பம், பிரிவின்போது உண்டாவதைப் பார்க்கிறோம். அன்பே செலுத்தாமல் சுய காரியவாதியாகவோ, அல்லது ஜடமாகவோ இருக்கிற ஜன்மாவே சிலாக்கியமானதோ என்றுகூடத் தோன்றிவிடும். அப்படிப்பட்டவனுக்கு இந்தப் பிரிவுத் துன்பமே இல்லை அல்லவா?

அன்பு செய்தாலும் முடிவில் துன்பம்; அன்பு இல்லாமல் இருந்தாலோ வாழ்க்கையில் ருசியே இல்லை. இப்படியானால் என்ன செய்வது? மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்புக்குரிய வஸ்து, நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து அதனிடம் அன்பை வைத்துவிட்டால், நாமும் அதுவும் ஒரு நாளும் பிரியப் போவதில்லை. எப்போதும் ஆனந்தமாக, நிறைவாக இருக்கலாம்.

அதாவது, என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவிடம், அன்பைப் பூரணமாக வைத்துவிட வேண்டும். பரமாத்மா நம்மை விட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர், பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்துவிடும். அவரிடம் வைக்கிற அன்பே சாசுவதமாக இருக்க முடியும்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்யா சுவாமிகள்

# வாழ்வின் பக்கங்க

கலை வாழ்வாகாது. ஆனால், வாழ்வின் அசலான பக்கத்தை அதைவிட எதனாலும் எதிரொலிக்க முடியாது.

கலை, கலைக்காகவே என்றும் கலை மக்களுக்காகவே என்றும் காலங்காலமாய் வாதிட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும், இதைப் பற்றியெல்லாம் கவலையின்றி கலை தன் ஜீவனைக் காலமாக்காமல் தனக்குள் தக்க வைத்தே வருகிறது.

அழகிய பெண்ணொருத்தி தன் குழந்தைக்குப் பாலூட்டுகிற கலை நுட்பமான சிலை, தான் ஒரு







தாய் என்பதைப் பிரசாரம் செய்தபடியே இருக்கும் என்பார்கள்.

நீங்கள் பார்க்கும் இச்சிற்பங்கள்... ஓவியம், சிற்பம் பற்றிய பட்டப் படிப்பை அளிக்கும் சென்னை எழும்பூர் அரசு கவின் கலைக் கல்லூரியின் நுழைவாயில் வளாகத்திலிருப்பவை. இவை வாழ்வின் பக்கங்களை நமக்கு வாசித்தபடியே இருக்கின்றன. அந்த வாசகங்களின் முன், இவற்றை வடித்தவர்கள் யார் என்கிற கேள்விகூட பின்னுக்குப் போய்விடுகிறது.

**- சசி**

புகைப்படங்கள்: இரா.சண்முகசுந்தரம்



# ஆரவாரமில்லா

'வெறுங்கை என்பது மூடத்தனம் விரல்கள் பத்தும் மூலதனம்' - இந்த காம்ப்ளான் வரிகள் எதற்குப் பொருந்துகிறதோ இல்லையோ, கம்ப்யூட்டர் பயிற்சிக்குப் பொருந்தி விடும். சகல தேவைகளையும் சாதித்துத் தரும் 'கற்பக தரு'வாகவே இக்காலச் சூழலில் கம்ப்யூட்டர் பயிற்சி உருவெடுத்துள்ளது. ஆயினும் ஏழைகளுக்கு இது இன்னும் எட்டாக் கனிதான்.



• பயிற்சியின்போது...



• சடகோப ராமானுஜதாசன்

ஆனால், அதையும் சரி செய்ய, சமூகப் புரட்சிக்கு உதவி செய்ய, சில சேவை அமைப்புகள் இருக்கத்தான் செய்கின்றன. சென்னை, பெரம்பூர், மாதவரம் நெடுஞ்சாலையில் மூன்று வருடங்களாக ஸ்ரீராமானுஜ சாரிடபிள் ட்ரஸ்ட் என்ற அமைப்பு, ஏழைகளுக்குக் கடமையாற்றி சத்தமில்லாமல் சாதித்து வருகிறது.

பெயரில் மட்டுமல்லாமல், ஒவ்வொரு அசைவிலும் பிரிக்க முடியாதபடி ஆன்மிக மணம் இரண்டறக் கலந்துள்ளது. நீ ஏழையா? பள்ளிப் படிப்பில் தோற்றவனா? அப்படியானால் உடனே உள்ளே வா என்றழைக்கும் இந்த ட்ரஸ்ட், இஸ்லாமிய, இந்து மற்றும் கிறிஸ்தவப் பெண்களுக்கான பயிற்சிப் பிரிவுக்கு ஆண்டாள் நாச்சியார் குழு என்று பெயரிட்டுள்ளது. அராஜக அப்பாவுக்குப் போதித்த பிரகலாதன் பெயரை, மாலை நேர டியூஷன் சென்டருக்கான பெயராகச் சூட்டியுள்ளது. மேலும் டி.எம்.ஒ., டேலி, ஃபோட்டோ ஷாப், கோரல் என்ற கம்ப்யூட்டர் பயிற்சி படிப்புகளுக்கு நம்மாழ்வார் குரூப், ஆளவந்தார் குரூப், பெரிய நம்பி குரூப், திருமங்கையாழ்வார் குரூப் என்றே பெயரிட்டிருக்கிறார்கள். அதைவிட சுவாரஸியம், இந்த அறக்கட்டளையின் ஆலோசகர்களாக வரதராஜ பெருமாள் (காஞ்சி), பார்த்தசாரதி (திருவல்லிக்கேணி), ராமானுஜர் (ஸ்ரீபெரும்புதூர்) இந்த மூவர் பொறுப்பேற்றுள்ளனர். 'அட! என்ன ஸார், கடவுளரை ஆலோசகர்களாகப் போட்டிருக்கிறீங்க?'ன்னு கேட்டோம். அறக்கட்டளை ஸ்தாபகரான 34 வயது சடகோப ராமானுஜதாசன் என்கிற சரவணன், ''எங்களின் வெற்றி தோல்விக்கு இறைவனே பொறுப்பு. அவனின் அறிவுரையே பிரதானம் - இல்லாவிட்



எண்ணூர் மீனவ குப்ப மாணவர்கள் 30 பேருக்கும் அளித்து வருகிறது இந்த அறக்கட்டளை. நடுத்தர குடும்ப மாண வர்கள் என்றால் மாதம் ரூ. 100 வசூலிக் கிறது. குழந்தை களுக்கான கம்ப்யூட்டர் பயிற்சியை ரூ.25க்கு அளிக்கிறது. ஆயிரக் கணக்கில் பணம் பிடுங்கும் கம்ப்யூட்டர் நிறுவனங்களுக்கு இது எரிச்சலையும் ஏற்படுத்தியுள்ளது.

பள்ளியில் தோற்றவர்களுக்காகப் பிரத் யேகமான கம்ப்யூட்டர் ட்ரெயினிங் ஸ்கூலும் குறைந்த கட்டணத்தில் நடக் கிறது. ஸ்ரீபெரும்புதூர் மடாதிபதி வரத எத்திராஜ ஜீயர் சுவாமிகளும் ஸ்ரீவில்லி புத்தூர் சடகோப ராமானுஜ ஜீயர் சுவாமி களும் வருகை தந்து ஆசி வழங்கியுள்ள இந்த அறக்கட்டளையில், இங்கு பயிற்சி பெற்ற மாணவ மாணவிகளே பயிற்சி ஆசிரியர்களாக சேவை செய்கிறார்கள்.

# ஆண்டவன் தொண்டு

டால், அறிமுகமே இல்லாத அண்ணா நகரைச் சேர்ந்த பலராமன் என்பவர், என்ன உதவி வேண்டும் என்று கேட்டு எங்களுக்கு தொடர்ந்து உதவ முன்வரு வாரா?'' என்று வாதிடுகிறார்.

ரிக்ஷா ஓட்டுகிற, கூலி வேலை செய்கிற பெற்றோர்களின் பிள்ளை களுக்கு, ஒரு ரூபாய்க்கு கம்ப்யூட்டர் பயிற்சியை பெரம்பூரில் 20 பேருக்கும்

'என் தலை சிதறினாலும் பரவா யில்லை. சொர்க்கத்துக்குச் செல்ல அனு மதிச் சீட்டான அந்த ரகசிய மந்திரத்தை ஊருக்கெல்லாம் ஓதுவேன்' என்று திருக்கோஷ்டியூர் கோயில் கோபுர உச்சி யில் நின்று உரத்துச் சொன்ன ஸ்ரீ ராமா னுஜரின் ஆத்மார்த்த அலை வரிசை, வேறு வேறு ரூபங்களில் பரவிக்கொண்டே இருக்கும் போலும்.

– **அமிர்தா**

படங்கள்: **காவ்யப்ரியதர்ஸன்**

★ திருமங்கையாழ்வார் குரூப்



★ மதநல்லிணக்க விழா





கண்களும் உதடுகளும் ஒரு முகத்தின் முக்கியமான அம்சங்கள்!

லிப்ஸ்டிக் போடத் தெரிவது கலை. ஒரு பெண்ணுக்கு அதிகம் கான்ஃபிடன்ஸ் தருவது, திருத்தமான மேக்கப்தான் என்கிறது ஓர் ஆய்வு.

லேட்டஸ்ட் ஃபேஷனில்

# உடையழகு... நடையழகு... லிப்ஸ்டிக்



புடவை, சல்வார் - கமீஸ் அணிந்தால் மாத்திரம் போதாது. முக அமைப்பு, உதடுகளின் ஷேப், உடல் நிறம், வயது, தலைமுடியின் கலர், செய்யும் வேலை, சீதோஷ்ண நிலை என சகலத்தையும் ஆராய்ந்த பிறகே லிப்ஸ்டிக் போட வேண்டும்.

தற்போதைய ட்ரெண்ட் க்ளாஸி லைட் ஷேட்தான். கல்லூரிப் பெண்களின் ஃபேவரிட், பிங்க், ப்ரௌன், மோவ் என பட்டாம்பூச்சிகளுக்கே சவால் விடும் அளவுக்கு வண்ண விழா!

மலிவாகக் கிடைக்கும் லிப்ஸ்டிக் வேண்டவே வேண்டாம். இன்றைய லிப்ஸ்டிக்கின் டாப் ட்ரெண்ட் நேச்சுரல் ஷேட்ஸ்தான்!

சரியான முறையில் லிப்ஸ்டிக் போட ஒரு பெண்ணுக்குத் தெரிந்திருக்க வேண்டும். வாய் முழுக்க லிப்ஸ்டிக் அப்பிக் கொண்டு, பற்களில் ஈஷிக்கொண்டு, பொருந்தாத கலரைப் போட்டுக்கொண்டு போனால், காட்சிப் பொருளாகிவிடுவீர்கள், ஜாக்கிரதை!

லிப்ஸ்டிக் போடுவது எப்படி எனப் பார்க்கலாமா...

- முதலில் சிறிது ஃபவுண்டேஷனை உதடுகளில் தடவவும்.
- உலர்ந்த பிறகு லிப் பென்சிலால் அவுட் லைன் போடவும்.
- அவுட் லைனுக்குள் லிப்ஸ்டிக்கைப் போடவும். வெளியில் வரக்கூடாது என்பது மிக முக்கியம்.
- முதலில் மேல் உதடு, பிறகு கீழ்.
- சிறிது எக்ஸ்பெரிமென்ட் பண்ண விரும்புபவர்கள் லைட் ஷேட் லிப்ஸ்டிக் போட்டுவிட்டு, ஒரு டிஷ்யூ பேப்பரை எடுத்து லேசாக ஒற்றி எடுத்து, பிறகு டார்க் ஷேடில் ஒரு கோட் லிப்ஸ்



டிக் தடவவும். பிறகு ப்ரஷ்ஷால் இரு ஷேட்களையும் ப்ளெண்ட் செய்யவும். சிறிது ப்ராக் டீஸ் தேவை.

● மெல்லிய உதடாக இருந்தால், லைட் ஷேட் அப்பர் லிப்பிலும், டார்க் ஷேட் லோயர் லிப்பிலும் போடவும்.

● சிறிய முகமாக இருந்தால் கீழ் உதட்டில் லைட்டர் ஷேட் போடவும்.

● உதடுகளைக் குவித்து 'ஓ' வடிவில் வைத்து லிப்ஸ்டிக் போட்டால் பற்களில் படாது.

● என்ன வகை லிப்ஸ்டிக் போட்டாலும், கடைசியாக டிஷ்யூ பேப்பரைக்கொண்டு மென்மையாக மவுத் ஆர்கன் வாசிப்பதுபோல் ஒற்றி எடுக்கவும். அதிகமான லிப்ஸ்டிக் பேப்பரில் போய்விடும்.

● ஆஃபீஸில் வேலை செய்யும்



# லெஸன்

பெண்கள் ப்ரைட் ஷேட்ஸ் தவிர்ப்பது நல்லது.

● இளம் பெண்கள் பிங்க் ஷேட் போட்டால் அழகாகத் தெரிவார்கள். மாநிறமுள்ள இதே வயதினர் ஆரஞ்சு ஷேட் போடலாம்.

● கரிய விழி கொண்டவர்கள் லைட் க்ரிம்ஸன், ப்ரௌன் விழிகளுக்கு பிங்க், நீல விழிகளுக்கு



ஸ்கார்லெட் (நல்ல சிவப்பு), சாம்பல் நிற விழிகளுக்கு ஆரஞ்சு ஷேட் என லிப்ஸ்டிக் போடலாம்.

● உதடுகளில் சிலருக்கு வரிகள் இருக்கும். இதை மறைக்க லிப்ஸ்டிக்கை வெர்டிக்கலாக (செங்குத்தாக) போடவும்.

● தூங்கப் போவதற்கு முன் லிப்ஸ்டிக்கை ரிமூவ் செய்து, வாஸலைன் அல்லது லிப் பாம் தடவுவது உதடுகளுக்கு நல்லது.

கொட்டைப் பாக்கும் கொழுந்து வெத்தலயும் போட்டா வாய் செவக்கும்... உண்மை! ஆனால், இன்றைய கல்லூரிப் பெண்களும் ஆஃபீஸ் பெண்களும் வெத்தலைய மென்றுகொண்டு இருந்தால் கல்லூரி, ஆஃபீஸ் நிர்வாகம், ஆக்ஷன் எடுக்கும். ஸோ, வெத்தலை அவுட்; லிப்ஸ்டிக் இஸ் இன்!

- லதா சேகர்

# வனம் செதுக்கும்

# வெளவால்



'வெளவால் சாத்தானின் மறு உருவம்', 'போன ஜென்மத்தில் பாவம் செய்த மனிதர்கள்தான் வெளவால்கள்.'

'தாய் சொல்லைக் கேட்காமல் துன்புறுத்திய பழைய ஜென்மத்து பிள்ளைகள்.'

- இவ்வாறெல்லாம் காலந்தொட்டே வெளவாலைப் பற்றி அபிப்ராயங்கள் நம் மனத்தில் ஊன்றப்பட்டுள்ளன. ஆயினும் இவையெல்லாவற்றையும் நிராகரித்து விடுகிறார் ஜூலியட் வனிதா ராணி. 'குரங்கிலிருந்து மனிதன் வரை வந்த உறவின் தொடர்ச்சியான பரம்பரையில் வந்தவை வெளவால்கள். ஆடு, மாடு போல அது பாலூட்டி வகை அவ்வளவுதான்' என்று, பழைய கிராம அபிப்ராயங்களை நிராகரித்துவிடுகிறார்.

கல்லூரிக் கல்வியின்போது வெளவால் பற்றிய ஆய்வைப் பாடமாகக் கொண்ட இவரின் தேடலில், புதுப் புதுத் தகவல்களை ஆய்வு உண்டியலில் சேகரிக்க ஆரம்பித்தார்.

நெல்லை, கோவை, குமரி, மேற்குத் தொடர்ச்சி மலையென மூன்று வருடங்கள் வனமும் வனம் சார்ந்த பகுதியையும் மலைப் பிரதேசங்களையும் முற்றுகையிட்டு செய்த ஆய்வுகளில்... சுமார் 35 வகை வெளவால்கள் தமிழகத்தில் மட்டும் இருப்பதையும் லெட்டிடன்ஸ் சலீம் என்ற வெளவால் இனத்தைக் கண்டறிந்து அடையாளமும் காட்டியுள்ளார். அடையாளப்படுத்திய வெளவால் இனத்தை, பறவை ஆய்வாளர் சலீம் அலியின் குறிப்பிலிருந்து உறுதிப்படுத்தி ஆயிரம் வாட்ஸ் பிரகாசத்தில் முகம் மலர்கிறார்.

'காடுகளைக் காப்பாற்றுங்கள், மரம் வளர்ப்போம்' என்ற குரலுக்கு, இந்தியாவிலுள்ள 120 வகை வெளவால்கள் மட்டுமே செவி சாய்க்கின்றன. காரணம், இரவு நேரத்தில் கிடைத்த பழங்களை வாயில் கவ்விக்கொண்டு தங்கள் இருப்பிடத்துக்கு வந்த பிறகே உண்ணும் பண்பு கொண்ட வெளவால்கள், அவ்வாறு இருப்பிடத்துக்குத் திரும்பும்வரை உள்ள இடைப்பட்ட தூரத்தில் இறக்கையை அசைத்து அசைத்துப் பறந்தபடியே, பழ விதைகளை பூமியில் உதிர்த்தவண்ணம் பறக்கின்றனவாம். சுமார் 40 கிலோ மீட்டர் தூரம் வரை, விதை நடு விவசாயத்தை இரவில் செய்கிறார் மிஸ்டர் வெளவால்!



இடையிடையே எலிகளை, பூச்சிகளை உண்டு பசியாறும் வெளவால்கள், விவசாயிக்கும் பகுதி நேரப் பணி செய்கின்றன.

கல்லும் முள்ளும் நிறைந்தது மட்டு

மின்றி விஷப்பாம்புகள், நஞ்சுப் பூச்சிகளினூடே தொடர்ந்த தங்களது வௌவால் பற்றிய வன ஆய்வுக்காக, குகைகளில் தங்கியபோது கண் விழித்து


ஜூலியட் வனிதா ராணி




நீ வளர்த்து, துஷ்ட மிருகங்களிடமிருந்து தங்களைக் காத்த வனவாசிகளை நன்றியோடு நினைவுகூர்கிறார்கள், வௌவால் பற்றிய ஆய்வில் ஈடுபட்ட பெண்கள்.

'கெட்ட சகுனத்தின் அடையாளமென்று, கோயில் கோபுரங்கள், சுற்றுப் புறச்சுவர்களில் வசிக்கும் வௌவால்களை வெகுமதி (ஒரு வௌவாலைக் கொல்ல ஆறு ரூபாய்) கொடுத்துக் கொல்வதைக் காணச் சகிக்கவில்லை' என்று கண்ணில் நீர் கசியக் கூறுகிறது இந்த ஆய்வுக்குழு.

வௌவால்களின் எச்சில்பட்ட விதைகள், கழிவோடு வெளியேறிய விதைகள் மட்டும், மற்ற விதைகளைவிட விரைவாக வீரியமாக முளைக்க என்ன காரணம்? எந்த வாசனைமூலம் வௌவால்களை அழைக்க முடியும், எந்த மணத்தால் அவற்றை விரட்ட முடியும் என்றெல்லாம் ஆய்வு தொடர முடிவெடுத்துள்ளனர். இதற்காக மத்திய, மாநில அரசுகள் மற்றும் லண்டனிலுள்ள தன்னார்வத் தொண்டு நிறுவனத்தின் உதவியோடு நெல்லை சாராடக்கர் மகளிர் கல்லூரியில் ஆய்வுக்கூடமும் அமைத்து, வௌவால் பற்றிய கேள்விகளுக்கு விடைகள் தேடிக்கொண்டிருக்கிறார் முனைவர் ஜூலியட் வனிதா ராணி.



வௌவால்களைப் பற்றிய மூட நம்பிக்கைகளை இவர்கள் கவிழ்த்து விரட்ட வாழ்த்துவோம்!

செய்திச் சித்திரம்: **த.இ.தாகூர்**

# சீன் நம்பர் - 2

''காலையில பெருமாள் தரிசனம் பண்ணிக்கோ... மதியம் ஸ்ரீ வாஞ்சியம் போ... வாஞ்சிநாத சாமி தரிசனம் பண்ணிட்டு, முடிஞ்சா எம தீர்த்தத்துல ஸ்நானம் பண்ணிட்டு வா... எம பயம் இருக்காது. ஆயுள் நல்லா விருத்தியாகும்... நான் சொல்றது புரிஞ்சுதாடா... முருகா...''

''சரி பெரியம்மா'' என்று முருகநாதன் கிளம்பினான். நீண்ட நாட்களாக ஓரம்கட்டிக் கிடந்த பெரியப்பாவின் சைக்கிள் அவனை மிகவும் கவர்ந்தது. அதை எடுத்து, படிந்திருந்த மண்ணைத் துடைத்துச் சுத்தம் செய்தான். பெரியம்மா ''போதும் கிளம்பு'' என்றாள்.

ஜனவரி மாதத்தின் மூன்றாவது ஞாயிற்றுக்கிழமை அது.

மணக்கால் அய்யம்பேட்டையிலிருந்து நேரே நூல்பிடித்தது போல வடக்கே நீண்டிருந்தது ஸ்ரீவாஞ்சியம் சாலை. இருபுறமும் குளிர்மை நிரம்பிய வயல்வெளியில் நெற்கதிரின் 'பால்' வாசனை, காற்றோடு மிதந்து வந்தது. சைக்கிளை மெதுவாக இயக்கிக்கொண்டிருந்தான் முருகநாதன். ஒரு காலத்தில் தீவிர கம்யூனிஸ்ட்டாக தன்னைப் பிரகடனம் செய்துகொண்ட ஒருவன், காலப்போக்கில் அதிலிருந்து பின்வாங்கியிருந்தான்.

''தோழர் சமூக அமைப்புல... மேட்டு நிலத்தைச் சரிசெய்ய, குழிதோண்ட வேண்டும். அப்போதுதான் மேடு மேடாகவும் பள்ளம் பள்ளமாகவும் இருக்கும்.'' இந்த ஒரு சங்கதிதான் இவனை யோசிக்க வைத்தது.



''நீங்க சொல்ற தீர்வு சரியானதா எனக்குப் படல தோழர்.''

''மேட்டு நிலத்தைச் சரிசெய்ய வேண்டிய அவசியமில்லை. பள்ளத்தைத் தான் சரி செய்யணும். அது என்ன மேடு மேடாகவும் பள்ளம் பள்ளமாகவும்... எனக்கு ஒண்ணுமே விளங்கல.''

கட்சியின் தலைமைக் குழு உறுப்பின

ரைப் பார்த்துக் கேட்டான். ''தோழர் முருக நாதன்... இது கட்சியின் கொள்கை முடிவு... இதுல கேள்வி கேட்க எவருக்கும் உரிமை யில்லை... அதை அப்படியே ஏத்துக்கறது தான் நமது வேலை... புரியுதா? முந்திரிக் கொட்டை மாதிரி கேள்வி கேட்கக் கூடாது... உங்களைவிட எல்லா விஷயமும் தெரிஞ்சவங்கதான் இங்கே இருக்காங்க.



■ சிவகுமார் முத்தய்யா ■

இப்படிக் கேனத்தனமா கேள்வி கேட் கறதை மொதல்ல நிறுத்துங்க'' செயற்குழு உறுப்பினர் ஜெகநாதன் குறுக்கிட்டுச் சொன்னார்.

முருகநாதனுக்கு அவர்களின் இந்தக் கொள்கை முடிவு விளங்கவே இல்லை. கல்லூரியில் படிக்கும்போதே இந்த இயக் கத்தின் கொள்கையால் கவரப்பட்டுத்தான் அதில் சேர்ந்தான். மாணவர் அமைப்பு, இளைஞர் அமைப்பு என்று படிப்படியாக அதில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டான். இருபத்தைந்து வயதில் தொடங்கிய தொடர்பு... பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. படிப்பு முடிந்ததே தவிர, வேலை எதுக்கும் போகவில்லை. கல்லூரியில் தன்னை விரும்பிய மௌனி காவின் காதலைக்கூட நிரா கரித்து இருந்தான். இயக் கத்தின் கொள்கை அவனைப் பற்றியிருந்தது. ஆனால், இவன் எதிர்பார்த்தது போல அங்கே எதுவும் நடக்க வில்லை என்பதைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அறியத் தொடங்கினான். எல்லாவற் றையும்விட.... 'மேட்டு நிலம்' விவகாரம்தான் இவன் அதிலிருந்து முற்றிலுமாக விலகக் காரணமாக இருந்தது.

''பத்து வருஷத்த வீணாக் கிட்டே. இனிமேலாச்சும் வேலைக்குப் போயி கல்யா ணம் பண்ணிக்க முயற்சி பண்ணு...'' அத்தை ஃபோனில் அடிக்கடி பேசி னாள்.

அம்மா... ''பெரியம்மா வீட்டுக்குப் போ... உங்க பெரியப்பா உனக்கு வேலை வாங்கித் தருவாரு'' என்று சொல்லித்தான் அனுப்பி வைத் தான் காட்டூருக்கு.

நேர்க்கோடாக விரிந்து கிடக்கும் சாலையில் சைக்கிள் காற்றின் மெல்லிய ஓசையோடு ஓடிக்கொண்டி ருந்தது. அறுவடைக் காலம் தொடங்க இன்னும் சில நாட்கள்தான் இருக்கின்றன என்பதை உணர்த்துவது போல் நெற்கதிர் கள் முற்றி, பழுத்துத் தவழ்ந்தன. வரப் போரங்களில் புல் அறுத்துக்கொண்டிருக்

கும் பெண்கள், களத்து மேடுகளில் 'புல்' செதுக்கும் ஆண்கள், கால்நடைகளை மேய்த்துக் கொண்டிருக்கும் முதியவர்கள்... என்று மக்கள் வயல்வெளியெங்கும் அங்கங்கே தென்பட்டார்கள். வயலோர மரங்கள் காற்றில் குலுங்கிக் கொண்டிருந்தன. கொக்குகள், மடையான்கள் வெள்ளை நிற 'பெயின்ட்' அடித்தது போல மரக்கிளைகளில் அமர்ந்திருந்தன.

மனம், இனம் பிரிக்க முடியாத 'துள்ளலில்' மிதந்துகொண்டிருந்தது முருகநாதனுக்கு. இதுவரை இப்படியொரு உணர்வு நிலைக்குத்தான் வயப்பட்டது இல்லை. இது புது அனுபவம். புது வாழ்க்கை தனக்குக் கதவைத் திறக்கப் போகிறது என்பதை உணர்ந்தான். எதிரே கோயில் கோபுரம் தூரத்து காட்சியில்... மகோன்னதமான அழகோடு தெரிந்தது.

'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்று அடிக்கடி பாட்டி சொல்வாள்.

அடர்ந்த மரங்களின் நடுவே எழுந்து நிற்கும் கோபுரம்... தன்னை 'வா' என அழைப்பது போலிருந்தது. மயிர்க்கால்கள் குத்திட்டன. பேரானந்தம் பீறிட்டது.

''எதற்காக சித்திரகுப்தன் மீது எமன் ஒழுங்கு நடவடிக்கை எடுத்துள்ளார்?''
''எமனுக்கு தெரியாமல் எல்.ஐ.சி. பாலிசி எடுத்ததற்காகதான்!''

- க.ரவீந்திரன்



கோயில் முகப்பருகே சைக்கிளை நிறுத்திவிட்டுத் திரும்பிப் பார்த்தான். அரச மரம் ஒன்று மெல்லிய காற்றில் சலசலத்துக் கொண்டிருந்தது. அதன் அருகே பரந்து விரிந்திருந்தது நீர்ப்பரப்பு. எம தீர்த்தம் என்று சின்ன போர்டு ஒன்று மரத்தில் தொங்கிக்கொண்டிருந்தது.

தீபாராதனை முடிந்து தீர்த்தம் தந்த போது எதேச்சையாக பெண்கள் பக்கம் திரும்பினான். மெளனிகா நின்று கொண்டிருந்தாள். அவள் இவனைப் பார்க்கவில்லை. இவன் பார்த்தான்... மெளனிகா தான். பத்தாண்டு இடைவெளி. அவள் வசீகரத்துக்குள், அழகுக்குள் எந்தவிதமான நெருக்குதலையும் உருவாக்கவில்லை! ஆனால், முகத்தில் பழைய தேஜஸ் இல்லை; கண்களில் ஒளியில்லை; நீண்ட கூந்தல் இல்லை; நெற்றியில் துலங்கும் சந்தனக் கீற்று இல்லை. ஆனால், அதையும் மீறி அதே அழகு... அது மட்டும் எப்படி?

கோயிலை வலம் வந்து, பரந்து விரிந்து கிடக்கும் கோயில் முற்றத்தில் உட்கார்ந்தான்.

**'மெள**னிகா' என்ற பெயரைக் கேட்டபோதே முதல் முதலாக இவனைக் கவர்ந்தது... அடுத்தது அவள் பேச்சு. எத்தனையோ உரையாடல்களில் இருவருக்குள்ளும் நிறைய விவாதங்கள் உண்டாகியிருக்கின்றன. மெளனிகா இவனைக் காதலித்தாள். இவனும் மெளனிகாவை விரும்பினான். ஆனால், சொல்லிக்கொண்டதில்லை. இவன் கட்சியில் சேர்ந்து தீவிரமாகப் பணியாற்றுவதை மெளனிகா ஏற்றுக் கொள்ளவே இல்லை. அடிக்கடி இதைப் பற்றிக் கடுமையாக விவாதித்திருக்கிறாள்.

''உனக்குச் சமூகத்தைப் பற்றி அக்கறையே கிடையாது. நீ வாழ்ந்தா போதும் உன் குடும்பம் வாழ்ந்தா போதும்... ரொம்ப செல்ஃபிஷ்...'' பதிலுக்கு இவனும் சரமாரியாகத் திட்டியிருக்கிறான். சில நாட்கள் இவள் கூடப் பழகுவதுகூட தப்பு என்று நினைத்திருக்

கிறான். அப்படித்தான் ஒரு நாள் வாக்கு வாதம் முற்றியது. ''நீங்க சுகபோகிங்க கூட்டம் - ஒனக்கும் எனக்கும் ஒத்து வராது'' என்று திட்டி, கேவலமாக நடந்து கொண்டான். அன்று மௌனிகா அழுது கொண்டே போய்விட்டாள். இவனும் வறட்டுப் பிடிவாதத்துடன் பேசுவதை நிறுத்திக்கொண்டான். ஆனால், மனத்தில் மௌனிகா எல்லா நிறைகுறைகளுடன் சம்மணமிட்டு அமர்ந்திருப்பதை மட்டும் தவிர்க்கவே முடியவில்லை. அதன் பிறகு மௌனிகாவின் அப்பாவுக்கு வங்கி வேலையில் டிரான்ஸ்ஃபர் ஆகி தில்லிக்குக் குடும்பத்தோடு போய்விட்டார்கள் என்று நண்பன் மூலமாக அறிந்தான். அதன் பிறகு எந்தத் தொடர்பும் இல்லை...

**'வா**ஞ்சிநாதர்... எதுக்கு என்னை அழைத்தார்? மௌனிகாவைப் பார்க்கவா! இருக்கலாம். இன்னும் திருமணம் செய்யாமலா இருப்பாள்? என்னை ஞாபகம் வைத்திருப்பாளா?' கோயில் பிராகாரத்துக்குள் இருக்கும் பிரம்ம தீர்த்தத்தில் குளித்து விட்டு வந்த இரண்டு சன்னியாசிகள் உரையாடத் தொடங்கியிருந்தார்கள்.

''பதிநாலு வருஷம், ராமனுக்கு... தனிமையும் பிரிவும் விதியின் விளையாட்டாக இருக்கலாம்! சீதைக்கு!?'' என்றார் அவர்களுள் ஒருவர். அது தன்னை நோக்கி எறியப்பட்ட ஒரு கேள்விபோல முருகநாதன் உணர்ந்தான். அதனைப் பிடிக்க முடியாமல் தவித்தான். கட்சியிலிருந்து வெளியேறி வந்த பிறகு, தனக்கு எதிர்காலமே இனி இல்லையோ என்றுதான் தோன்றியது. அம்மா தொடர்ந்து இவனிடம் பேசினாள். ''இனிமே உனக்கு நல்லதுதான் நடக்கும்! எதேச்சையாகப் பார்க்க நேர்ந்த நாடி ஜோதிடனும் இதையேதான் சொன்னான்...''

பெண்கள் கூட்டத்திலிருந்து விலகி, மௌனிகா தனியாக வந்தாள். முருகநாதனுக்கு இருப்புக்கொள்ளவில்லை. உடல் நடுங்கியது. நாக்கு வறண்டு போனது. பேசத்தான் வருகிறாளோ? என்று நினைத்தான். இயல்பாக இவனைக் கடந்து எமதர்மராஜா கோயிலுக்குப் போனாள். 'அட, எம தரிசனம் செய்யவே இல்லை! அட வாஞ்சிநாதா, இதென்ன சோதனை! மௌனிகாவைக் காட்டவா என்னை அழைத்தாய்?

தவறுதான்! நான் நடந்து கொண்டது... செய்தது எல்லாமே எனக்கு அப்போது புத்தி பேதலித்து இருந்தது. இப்போது தெளிந்துவிட்டேன். எல்லா இஸங்களும் எல்லா கொள்கைகளும் மனிதனின் அடிப்படையான சந்தோஷம் பற்றி... பெரிதாக அலட்டிக்கொள்ளவில்லை என்று உணர்ந்துவிட்டேன். மௌனிகாவிடம் என் மன்னிப்பைக் கோரவும் தயாராக இருக்கிறேன். அவளை என்னிடம் சேர்த்ததுக்குக் கோடான கோடி நன்றிகள்! நானே அவளிடம் பேசுகிறேன்.'

அவளைப் பின்தொடர்ந்தான். 'எம தர்மராஜாவைக் குனிந்து வணங்கக் கூடாது. நின்றபடி தரிசனம் செய்ய வேண்டும்' என்று பெரியவர் ஒருவர் மௌனிகாவுக்கு அறிவுறுத்தினார். முருகநாதன் எதிரே

போய் நின்றான். அவள் முகத்தில் எந்தச் சலனமும் இல்லை! 'நம் முகத்தையே மறந்துவிட்டாளா! வாஞ்சிநாதா... திருமணம் ஆகிவிட்டதா? கால்களில் மெட்டியில்லை. கழுத்தில் தாலியில்லை. என்ன புத்தி இது? மௌனிகா என்னை மன்னித்துக் கொள்!' அவளைப் பார்த்தபடி நின்றான். பேச வார்த்தைகள் இல்லை... எல்லாம் உள்ளுக்குள்ளேயே!

மௌனிகா நடந்தாள். சற்று தூரம் தள்ளி பின்னால் நடந்தான். தேக்கு இலையில் வெண் பொங்கல் வினியோகம் செய்துகொண்டிருந்தார்கள். சன்னியாசிகளின் உரையாடல் தீவிரம் அடைந்திருந்தது. ''காதலித்த பெண், காதலனை எந்தக் காலத்திலும் மறக்கறது இல்லை... எல்லாம் காலக் கொடுமைதான்!''

**மௌ**னிகா தன் உறவினர்களோடு சேர்ந்துகொண்டாள். அவள் எதிரே நின்று, வாஞ்சிநாதனிடம் மனம் உருகினான். மௌனிகா கூட்டத்தோடு கூட்டமாக ஒதுங்கி நின்று முருகநாதனைப் பார்த்தாள். 'நாடு... சமூகம்... என்று பேசித் திரிந்தவன் இப்படி ஆகிவிட்டானே...! மேரேஜ் ஆகியிருக்குமா? நம்மைப் போல திருமண வாழ்க்கை தோல்வியில் முடிந்திருக்குமா? தோழி நிலா, முருகநாதன் இன்னும் கல்யாணம் செய்துக்கலன்னுதானே சொன்னாள். நமக்கு வாய்த்தவன் எப்படிப்பட்ட சுயநலக்காரன்... கொடுமைக்காரன்...' விவாகரத்தில் முடிந்த தனது வாழ்வை நினைக்கையில், மீண்டும் மனத்தில் கசப்பு பரவியதை நிறுத்த முடியாது தவித்தாள். அவனைவிட நூறு மடங்கு, ஏன்? ஆயிரம் மடங்கு முருகநாதன் மேல்! இன்னும் என்னைப் பின் தொடர்ந்து வருகிறானே! அந்தப் பழைய காதல் இன்னும் மனத்தில் அப்படியேதான் இருக்கிறது என்கிறபோது ஒரு சிலிர்ப்பு துளிர்த்தது.




அழவேண்டும் போலிருந்தது. உச்சி கால பூஜையைத் தொடங்கியிருந்தார்கள். நடு முற்றத்தில் யாகங்கள் வளர்த்து மந்திரங்கள் ஓதிக்கொண்டிருந்தார்கள்.

'அவள் என்னை மறந்துவிட்டாள். இனிமேல் அவளிடம் வலியப் போய் நான் உன் முன்னால் நண்பன் முருகநாதன் என்று சொன்னால், எனக்கு அப்படியொரு ஆளே தெரியாது என்று அவள் சொன்னால், என்ன செய்வது...? வேண்டாம்' மனத்தைச் சற்று தேற்றிக்கொண்டே கோயில் வடக்கு புறம் இருக்கும் பிரம்ம தீர்த்தத்துக்குப் போனான். மதிய வெயில் வெப்பம் குறைவாகவே இருந்தது. நீர் மெல்லிய அலைகளோடு தளும்பிக்கொண்டிருந்தது. சன்னியாசிகளின் உரையாடலைச் சரியாக கவனித்திருக்க வேண்டும் என்று தோன்றியது. மரங்களில் அமர்ந்த காகங்கள் இடைவிடாது கரைந்தன. உச்சி கால பூஜை முடிந்திருந்தது. இப்படியே உட்கார வேண்டும் போல் தோன்றியது. இந்தத் தனிமை ஒரு தாலாட்டைப்போல இன்பம் அளித்தது. நீரின் சலனங்களைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான். தன் பின்னால் ஏதோ நிற்பதுபோல் தோன்றியது.

குளத்து நீரில் முருகநாதனின் தோளைத் தொட்டபடியிருந்த மௌனிகாவின் பிம்பத்தில், மீன்கள் அலைகளை எழுப்பின. ●

கல்கி (18.5.2008) இதழில் 'சந்தனக்காட்டின் அழுகை' என்ற தலைப்பில் வெளிவந்த செய்தியில், இது 'வீரப்பனை ஹீரோவாக்கும் முயற்சியா...? விழிப்புணர்வுத் தொடரா?' எனக் கேட்டு, வாசகர்களை விவாதிக்க அழைத்திருந்தோம். அவர்களின் கருத்துகளிலிருந்து சில பகுதிகள்...

தொடரின் நாயகனாக வீரப்பன் உள்ளாரே தவிர, எந்தவொரு இடத்திலும் ஹீரோவாகச் சித்திரிக்கப்படவில்லை. வீரப்பனைத் தேடுகிறோம் என்ற போர்வையில், காமக் கொடூரர்களும் மனிதாபிமானமற்ற பிராணிகளும் அரங்கேற்றிய கொடுமைகளுக்கு முன், வீரப்பனே தேவலை என்ற எண்ணத்தை ஏற்படுத்தியது.

**- வீ.விஷ்ணுகுமார், கிருஷ்ணகிரி**

வீரப்பனைத் தியாகியாக, மாவீரனாகக் காட்டுவது, நீதிக்கும் மனித குலத்தின் மனச்சாட்சிக்கும் விடப்படும் சவாலாகும்.

**- ஆர்.கிருஷ்ணமூர்த்தி, சென்னை - 78**

ஒரு சமூக விரோதியை ஹீரோவாக்குவதும் அவன் செயல்களுக்குச் சமூகம்தான் காரணம் என நியாயப்படுத்துவதும், 'வீரப்பர்' என மரியாதையாக அழைப்பதும் அதைத் தொடரில் நியாயப்படுத்துவதும் ஏற்கத்தக்கதல்ல.

**- கல்யாணி பாலு, புதுக்கோட்டை**

தனக்காகச் செயல்படுபவர்களைக் காப்பது இயல்பு என்றாலும், எதிர்ப்பவர்களை ஒழித்துக் கட்டுவது நியாயமாகாதே. இதை வீரப்பனும் செய்தார். அதை விளக்கியிருக்க வேண்டும்.

**- பி.மகேஷ், திருச்சி.**

மக்களின் இயல்பு வாழ்வைக் கெடுத்த வீரப்பனை, ஹீரோவாக்கும் இந்தத் தொடர் விபரீத முயற்சிதான்.

**- லலிதா செல்லப்பா, பம்மல்**

ஆட்டோ சங்கர், சந்தனக்கட்டை வீரப்பன் இவர்களின் தொடரை ஒளிபரப்பு செய்து என்ன ஆகப் போகிறது? இவனைப் பிடிக்கப் போன படைகள் செய்தது அக்கிரமம் தான். அதற்காக கொலை, கொள்ளைக்காரனை தலைவர் அந்தஸ்தில் வைக்கலாமா?

**- என்.சண்முகம், திருவண்ணாமலை**

உணர்வுரீதியாக இத்தொடர் சரியாகப் பட்டாலும், பொது நீதி முன் இது தவறே.

**- ஆர்.பிரபு, சென்னை - 90**

நடந்ததை ஒளிவு மறைவின்றி பதிவு செய்திருக்கிறார்கள். இது விழிப்புணர்வு முயற்சியா (அ) வீரப்பனை ஹீரோவாக்கும் விபரீத முயற்சியா என அறுதியிட்டுக் கூற முடியவில்லை. இதுவேகூட ஆபத்தான சித்திரிப்புதான்!

**- ஆர். பழனிக்குமார், மதுரை - 14**

## சரியா? தவறா?

# சந்தனக்காடு சர்ச்சை!





அந்தப் பூங்காவுக்கு அருகே நீங்கள் சாதாரண மாக நடந்து சென்றால்கூட, ஓடி வந்து பேச ஆரம் பித்துவிடுவார்கள். 'நீங்கள் இந்தப் பகுதியைச் சேர்ந்தவர்தானா? எங்கே வேலை செய்கிறீர்கள்? எனக்கு ஒரு மகள் இருக்கிறாள். மாதச் சம்பளம் இவ்வளவு. பார்க்க லட்சணமாக இருப்பாள். இத்த னாம் ஆண்டு பிறந்தவள். வீட்டுக்கு ஏற்ற பெண். நிச்சயம் உங்களுக்கு அவளைப் பிடிக்கும். சொல்லுங்கள், உங்கள் தொலைபேசி எண் என்ன, உங்கள் பெற்றோரிடம் நாங்கள் பேசலாமா?'

'அச்சச்சோ... இல்லை அம்மா, நான் ஏற் கெனவே மணமானவன்' என்று நீங்கள் சொன்னால், விட்டுவிட மாட்டார்கள். 'ஓ... அப்படியா? அத னால் என்ன? என் பெண்ணைப் பற்றி நான் உங்களி டம் சொல்லிவிட்டேன். உங்கள் சொந்தக்காரப் பையன் யாராவது இருந்தால் சொல்லுங்கள். தெரிந்தவர்களிடம் சொல்லி வையுங்கள். இதோ

# மேரேஜ் பார்க்!

இதுதான் என் விசிட்டிங் கார்ட். நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் நண்பரே. அப்போ நான் கிளம்பவா?'

சீனாவின் தலைநகரமான பெய்ஜிங்கில் இருக்கிறது இந்தப் பூங்கா. ஷோன்சென் பார்க் என்று பெயர். நல்ல விசாலமான அழகிய மரங்கள் அடங்கிய காற்றோட்ட முள்ள பிரதேசம். உலகில் உள்ள பிற பூங்காக்களைப் போல்தான் இதுவும் இருந்தது. காற்று வாங்குவதற்கும் காதலியுடன் கைகோத்து ஊர்க் கதை பேசவும், தொப்பையைக் கரைக்க வாக்கிங் போவதற்கும் மட்டும் உபயோகப்படுத்திக்கொண்டிருந்தார்கள். மிகச் சமீ பத்தில்தான் திருமண நிலையமாகவும் இந்தப் பூங்கா மாறியிருக்கிறது.

வீட்டில் பையனுக்கோ பெண்ணுக்கோ திருமண வயது எட்டிவிட்டால் போதும், 'சரி வா, பார்க்குக்குப் போகலாம்' என்று அப்பாவும் அம்மாவும் கிளம்பி வந்து விடுவார்கள். 'இல்லை இல்லை என் பேத்திக்கு நான்தான் வரன் பார்ப்பேன்' என்று சொல்லி மூக்குக் கண்ணாடி யைப் போட்டுக்கொண்டு, கைத்தடியால் டக் டக்கென்று சத்தம் போட்டபடி நடந்து வரும் தாத்தா பாட்டிகளும் ஏராளம்.

சிம்பிள். நடந்துகொண்டே இருக்க வேண்டும். வருவோர் போவோரை வேடிக்கை பார்க்க வேண்டும். இந்தப் பையன் ஓகே, இந்தப் பெண் ஓகே என்று தெரிந்தால் சட்டென்று விரைந்து சென்று (உங் களைப் போலவே பலரும் காத்துக்கொண்டிருப்பார்கள் அல்லவா?) கையை நீட்டி அறிமுகம் செய்துகொண்டு, பேச ஆரம்பித்துவிட வேண்டியதுதான். 'என் னப்பா பண்றே? எங்கேம்மா இருக்கே? வா இப்படி உட்கார்ந்து பேசுவோம்.' அவ்வளவுதான் கதை.

ஒரு மரத்தின் கீழ் அமர்ந்து தரை விரிப்பை விரித்து, சாவகாசமாக முந்திரிப் பக்கோடா சாப் பிட்டுக்கொண்டேகூட வரன் தேடலாம். தேவை ஒரு பதாகை. கொட்டை எழுத்துகளில் எழுதி வைக்க



வேண்டும். மணமகள். 28 வயது. ஃபுக்ஸிங் பகுதியில் சொந்தமாக ஒரு அபார்ட்மென்ட். கடன் இல்லை. கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர். தொலை பேசி எண் இதோ. முகவரி இதோ. தேவை ஒரு நல்ல பன்றி. அல்லது மாடு!

இன்னும் கொஞ்சம் தள்ளி நடந்தால் இன்னொரு பதாகை. பெண். 27 வயது. உயரம் 1.6 மீட்டர். ஐ.டி. கம்பெனி. கை நிறையச் சம்பளம். அழகு. மது அருந்த



**மருதன்**

மாட்டார். சிகரெட் பிடிக்க மாட்டார். நல்ல வேலையில் உள்ள, நன்றாகப் படித்த எலி தேவை!

பதறவேண்டாம். சீனர்கள் வருடங்களை மிருகங்களின் பெயர்களில் பிரித்து வைத்திருக்கிறார்கள். பன்றி வருடம், டிராகன் வருடம், எலி வருடம், பாம்பு வருடம் இப்படியாக. பாம்பு வருட மணமகனுக்கு, இரி வருட மணமகள் ஆகாது என்பது போன்ற சம்பிரதாயம் அங்கே உண்டு.



பாம்பைப் பெற்ற பெற்றோர், பக்கோடா சாப்பிட்டபடி உட்கார்ந்திருப்பார். மாட்டைப் பெற்ற பெண் வீட்டுக்காரர்கள் பார்க்குக்கு வந்திருந்தால், ஓடி வந்து இவர்களுடன் உட்கார்ந்து மிச்சமுள்ள பக்கோடாவை வாங்கிக் கொறித்தபடி பேசுவார்கள். புகைப்படங்கள் கைமாறும். மற்ற விஷயங்களையும் பேசி முடிவு செய்துவிட்டு அவரவர் வீடுகளுக்குப் போய்விடுவார்கள். பிறகு,

பாம்பும் மாடும் சந்தித்துக்கொள்வார்கள்; அதே பார்க்கில். பேசுவார்கள்; பிடித்திருந்தால், திருமணம். ஒத்துவராது என்று தெரிந்தால் கைகுலுக்கிவிட்டு பிரிந்து விடுவார்கள்.

திருமணம் நிச்சயமாகி விட்டால், பிறகு பார்க்குக்குப் போக மாட்டார்கள். போனால், வரன் தேடி வருபவர்கள் யாராவது வந்து பேசிக்கொண்டே இருப்பார்களே!

சீனப் பெண்கள், அந்தப் பூங்காவைக் குழந்தைக்குக் காட்டி, தங்களது கதைகளைச் சொல்வார்கள். 'அதோ அங்கேதான் நான் உங்க அப்பாவை முதன் முதலாகப் பார்த்தேன்.' 'நாமும் போகலாமா அம்மா?' என்று குழந்தை கேட்டால், புன்னகையுடன், 'கொஞ்சம் பொறும்மா. அதுக்கு இன்னும் நேரம் இருக்கு!' என்பர்.

இங்கும் ஒரு மேரேஜ் பார்க் இருந்தால் நன்றாகத் தானிருக்கும்... மம்ம்ம்....

## படுதலம் சுகுமாரன்

# புள்ளிகள்... கோலங்கள்... 23

''அடுத்து...?''

''கோகிலாவின் அப்பா தர்மலிங்கம். அவருக்கு ஆரம்பம் முதலே.... பொன்ராஜ் குடும்பத்தின்மேல் பகை. அவர் மகள் அடித்து விரட்டப்பட்டதில், அவர் கோபத்தின் உச்சிக்கே போயிருக்கிறார். பொன்ராஜைத் தீர்த்துக் கட்டுகிறேன் என்று சபதம் செய்திருக்கிறார்...''



''வேற யார் மேலயும் சந்தேக நிழல் விழுகிறதா...?''

''ஆமாம் சார்; இன்னும் ஒரு நபருக்கு... பொன்ராஜ் மேல் கோபம் உண்டு'' என்றார், அதிகாரி.

''யார் அது?''

''ஃபோட்டோகிராபர் அசோக்...''

''பொன்ராஜுக்கும் ஃபோட்டோ கிராபருக்கும் என்ன விரோதம்?'' ''அந்த அசோக்தான், பணத்துக்காக, கோகிலாவுக்குப் படம் எடுத்துக்கொடுத்தாலும், அந்த விஷயத்தைப் பொன்ராஜுக்கும் தெரியப்படுத்தப்போய், போலீஸில் சிக்கிக்கிட்டார். இந்த விவகாரத்துல அவர் குடும்பமும் ஸ்டேஷன் படியேற வேண்டியிருந்தது. மகன் இப்பேர்ப்பட்ட காரியங்கள் செய்துதான் பணம் சம்பாதிக்கிறான்னு தெரிஞ்சதும் அவங்க, அசோக்கை வீட்டைவிட்டு வெளியேத்திட்டாங்க. இந்தச் சந்தர்ப்பத்துல, பொன்ராஜ் தன்னைக் கண்டுக்காம விட்டுட்டாருங்கற ஆத்திரம்...''

''இவங்க நாலு பேரையும் விசாரிச்சிட்டீங்களா...?''

''விசாரிச்சிட்டோம். ஆனால், நடவடிக்கை எடுக்கப் போதுமான ஆதாரங்கள் கிடைக்கலை. அவங்களை நம் ஆட்கள் வாட்ச் பண்ணிக்கிட்டிருக்காங்க. தேவைப்பட்டால், அவர்களைக் கைது பண்ணி, நார்க்கோ அனாலிஸிஸ் பண்ணிப் பார்க்கலாம்.''

''மிஸ்டர் விஷ்வா... நீங்க என்ன சொல்றீங்க...?''

கமிஷனரின் பார்வை, கடைக்கோடியில் உட்கார்ந்திருந்த சி.ஐ.டி. விஷ்வாவிடம் பாய்ந்தது.

ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த விஷ்வா, தலை நிமிர்ந்து,

''பொன்ராஜ் தயாரித்த சீரியலை நான் இப்பதான் கேசட் வாங்கி, போட்டுக் பார்க்க ஆரம்பிச்சிருக்கேன். முழுசா பார்த்தபிறகுதான் என் கருத்தைச் சொல்ல முடியும்'' என்றார்.

கமிஷனர் உட்பட, இதர போலீஸ் அதிகாரிகள் முகங்களிலெல்லாம் கொஞ்சம் குழப்பம்.

(தொடரும்)

# சமத்துவ வளையோசை!

ஓரிடத்தில் ஒரே சமயத்தில் எழுபத்தியெட்டு கர்ப்பிணிப் பெண்களுக்கு, வளைகாப்பு நடத்தினால் எப்படியிருக்கும்? காணக் கண் கோடி வேண்டும். அப்பகுதி கிராம மக்கள் இவ்விதம்தான் பூரித்துப் போயுள்ளனர். அத்தனை பெண்களின் கைகளிலும் கன்னங்களிலும் பூசி விடப்பட்ட சந்தனத்தின் நறுமணம். கர்ப்பிணிப் பெண்களின் கைகள் நிறைய அணிவிக்கப்பட்ட வண்ண வண்ண வளையல்கள். சந்தனத்தின் நறுமணமும் வளையல்களின் 'கிண்கிணி' ஓசையும் அன்று முழுவதும் அப்பகுதியில் நிறைந்திருந்தன. வேலூர் மாவட்டம், ஊசூர் அரசு ஆரம்ப சுகாதார நிலையத்தில்தான் இந்த அரிய நிகழ்ச்சி நடந்தேறியுள்ளது.



✱ ஷீலா ராஜன்



✱ டாக்டர் எஸ்.ராஜசேகரன்

''இத்தினி விமரிசையா நடக்கும்னு நான் நெனைக்கல. என்னோட பாவா (கணவர்) இஸ்மாயில், சைக்கிள்ல பழைய இரும்பு வியாபாரம் பண்றவரு. வருமானம் பெருசா இல்ல. இப்ப எனக்கு ஒன்பது மாசம். ஆரம்பத்துலேருந்து ஊசூர்லதான் வந்து பார்த்துக்கறேன். டாக்டரம்மாவும், நர்ஸுங்களும் நம்ப ஆஸ்பத்திரியில இது போல ஒரு வளைகாப்புன்னு என்கிட்ட சொன்னாங்க. உடனே சந்தோஷமா ஒத்துக்கிட்டேன். ஏன்னா, எங்களைப் போல ஏழை முஸ்லிம் குடும்பத்துல இதெல்லாம் கரெக்டா செய்ய முடியாது. அதனாலயும் இந்த வளைகாப்பு எனக்குத் தேவையா இருந்தது!'' என்கிறார் மைமூனா.

''அதாங்க வளைகாப்புத் திருவிழா! இத்தினிக்கும் நாங்க ஆதிதிராவிடர் வகுப்பைச் சார்ந்தவங்க. அன்னைக்கு வளையல் போட்டுக்கிட்ட ஒவ்வொரு பெண்ணும் வெவ்வேற சாதிக்காரங்க. இந்து, முஸ்லிம், கிறிஸ்துவம் என மூணு மதத்துப் பெண்களும் அதுல கலந்துக்கிட்டாங்க. 'சமுதாய சமத்துவ வளைகாப்பு'ன்னும் அதனைச் சொல்லலாம். ஏன்னா, எனக்கு அத்தினி சந்தோஷம் அன்னைக்கு. ஊசூர் அரசு ஆரம்ப சுகாதார நிலையத்தின் டாக்டர்கள், நர்ஸுகள், பணியாளர்கள் எல்லாம் இதுக்கு மூல காரணம். நாங்க எல்லாருமே வேலூர் மாவட்ட சுகாதாரப் பணிகள் துணை இயக்குநர் டாக்டர் எஸ்.ராஜசேகரன் சாருக்கு ரொம்ப நன்றி சொல்லணும்!'' எனக் கூறுகிறார் அரியர் சித்ரா.

''ஒவ்வொரு கர்ப்பிணிப் பெண்ணுக்கும், செவிலியர்களே வந்து கை நிறைய வளையல் போட்டாங்க. பழத் தட்டுகள் ஏந்தி வந்தாங்க. சேலை, ஜாக்கெட், மஞ்சள், குங்குமம் சீர்வரிசை வைச்சுத் தந்தாங்க. எனக்கு இது எல்லாமே புதுசு. வசதியான குடும்பங்கள்ல பாதிரியார்களை வீட்டுக்கே வரவழைச்சு பிரார்த்தனை வைப்பாங்க. அவ்வளவுதான். அதனால எனக்கு இந்த வித்தியாசமான வளைகாப்பு ரொம்பவே பிடிச்சிருந்திச்சு!'' என்கிறார் கன்னிகாபுரம்

**‘ஒவ்வொரு பெண்ணும் வெவ்வேற சாதிக்காரங்க. மூணு மதத்துக்காரங்களும் கலந்துக்கிட்டாங்க.’**

ப்னோரா.

''எம்பெரு நாகம்மாள். என் கணவர் நாகராஜன். நான் திருப்பத்தூர். அவுரு குடியாத்தம். துணி வியாபாரத்துக்கு அவர் தன்னோட முதலாளிக்காக துணி வாங்க ரயில்ல வருவாரு. அப்பத்தான் எங்க ரெண்டு பேருக்குள்ளும் காதல் மலர்ந்துச்சு. ரெண்டு பேரும் வெவ்வேற சாதி. அதனால ரெண்டு வீட்லயும் கடும் எதிர்ப்பு. அதனை மீறி நாங்க நண்பர்கள் உதவியினால கல்யாணம் செஞ்சுக்கிட்டு வேலூர் வந்துட்டோம். கல்யாணம் ஆகி ஒரு வருஷம் ஆவுது. இப்ப நான் ஒன்பது மாதம். வழக்கமா பொண்ணோட அம்மா அப்பா வந்து, மாப்பிள்ளை வீட்டுல வளைகாப்பு செஞ்சு வைப்பாங்க. அதான் எங்க விஷயத்துல 'மிஸ்' ஆயிடுச்சே. அதனாலயும் இந்த வளைகாப்புக்கு நாங்க ரெண்டு பேரும் ரொம்பவும் தேவையான பொருத்தமான தம்பதியாயிட்டோம்!'' எனச் சிரிக்கின்றனர் நாகம்மாள் - நாகராஜ்.

''வளைகாப்புக்கு வந்திருந்தவர்களுக்கு ஐந்து வகை சாதம் விருந்தாகப் பரிமாறப் பட்டது. இது முற்றிலும் நன்கொடையாளர்கள் தந்திருந்த நிதி கொண்டு நிகழ்த்தப்பட்ட விழா. ஊராட்சிக் குழுத் தலைவர் ஷீலா ராஜன் மற்றும் அப்பகுதி ஊராட்சித் தலைவர்களின் நிதியுதவி மற்றும் பங்களிப்பு இதில் மிக அதிகம். அரசு ஆரம்ப சுகாதார நிலையங்கள், அந்தந்தப் பகுதி வாழ் பொதுமக்களின் மிக முக்கியமான அங்கம் என்பதை நிரூபித்துக் காட்டவே இதுபோன்ற வளைகாப்பு!'' என்கிறார் வேலூர் மாவட்ட சுகாதாரப் பணிகள் துணை இயக்குநர், டாக்டர் எஸ்.ராஜசேகரன்.

**செய்தியும்,**
**சித்திரங்களும்:**
**ஸ்ரீரங்கம் திருநாவு**





ட்ரிபிள்
ஈக்கு ஆசைப்படுற
வங்களுக்கெல்லாம்
கனவு நனவாகுமா
பரத்வாஜ் ஸார்..?

# நடக்குமென்பார் ;

**மேஷம்:** தெளிந்த எண்ணம் கொண்ட மேஷ ராசி அன்பர்களே! வெளியூர் பயணம் செல்வீங்க. உத்தியோகத்துல உயர்வு ஏற்படப்போகுது. இல்லற வாழ்க்கை ஜம்முன்னு இருக்கும். வியாபாரம் நல்லா போகும். வழக்குல வெற்றி பெறுவீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(சம்மர் முடியப்போகுது பார்த்துக்குங்க)*

**ரிஷபம்:** தெய்வ நம்பிக்கை நிறைந்த ரிஷப ராசி அன்பர்களே! உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில் இருக்கும். சுபகாரியங்கள் நடைபெறப் போகுது. புதிய வேலைவாய்ப்புங்க தேடி வரும். மகான்களின் தரிசனம் கிடைக்குமுங்க. வாரந்தோறும் சனி / குரு வழிபாடு நன்மையளிக்குமுங்க.

*(சுபகாரியங்களைச் சீக்கிரம் முடிங்க)*

**மிதுனம்:** உயர்ந்த எண்ணம் கொண்ட மிதுன ராசி அன்பர்களே! நெருங்கிய நண்பர்கள் உங்களை விட்டு விலகப் போறாங்க. தொழில்ல நல்ல ஏற்றம் இருக்குமுங்க. விட்டுக் கொடுத்துப் போவது குடும்பத்துல மகிழ்ச்சியைப் பெருக்கும். ராகு / கேது வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(நல்ல நண்பனை விட்டுப் பிரிஞ்சுடாதீங்க)*

**கடகம்:** பழகுவதற்கு இனிய கடகராசி அன்பர்களே! மன உளைச்சல் தீருமுங்க. குடும்பப் பிரச்னைகள் இனி இருக்காதுங்க. கொடுக்கல் வாங்கல் நல்ல நிலையில் இருக்கும். வியாபாரத்துல எதிர்பார்த்த முன்னேற்றம் உண்டுங்க. ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மையைத் தரும்.

*(வியாபாரத்துல கண்ணும் கருத்துமா இருங்க! கோட்டை விட்டுடாதீங்க)*

**சிம்மம்:** தைரியமான உள்ளம் கொண்ட சிம்மராசி அன்பர்களே! இது உங்களுக்கு மகிழ்ச்சிகரமான வாரமுங்க. வெளிநாடு போவீங்க. பொன் பொருள் சேர்க்கை இருக்கும். புதிய தொழில் தொடங்குவீங்க.

காதல் இனிக்குமுங்க. பதவிங்க தேடி வரும். சனீஸ்வர வழிபாடு மேலும் நன்மையை அதிகப்படுத்தும்.

*(மனைவியைக் காதலிங்க சார்! வாழ்க்கை நல்லா இருக்கும்)*

**கன்னி:** நட்புக்கு இனிய கன்னி ராசி அன்பர்களே! வீண் விரயங்கள் ஏற்படலாம், கவனமாக இருங்க.

# நடக்கும்!

பூர்வீகச் சொத்து பிரிவினை ஆகுமுங்க. எதிர்பார்த்த உத்தியோக மாற்றம் உண்டு. கல்வியில் மேன்மை அடைவீங்க. ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மை யளிக்குமுங்க.

*(சண்டையில்லாம சொத்தைப் பிரிச்சுக்குங்க...)*

**துலாம்:** பேச்சுத் திறமையுள்ள துலாம் ராசி அன்பர்களே! தொழில்ல மாற்றம் ஏற்படப் போகுதுங்க. உடல் ஆரோக்கியம் நல்லா இருக்கும். வீடு, மனை மூலமாக ஆதாயம் கிட்டுமுங்க. பொறுப்புள்ள பதவிங்க தேடி வரும். கடன் சுமையெல்லாம் தீர்ந்துடும். ராகு / கேது / குரு வழிபாடு நன்மை தரும்!

*(பதவி வரும்போது பணிவு வரவேண்டும், மறந்துடாதீங்க)*

**விருச்சிகம்:** எளிமையின் சின்னமாக விளங்கும் விருச்சிக ராசி அன்பர்களே! பணம் பல வழிகளில் வந்து பாக்கெட்டை நிரப்பும். நீண்ட காலமாக எதிர்பார்த்த காரியம் நடைபெறும். கல்வி வளம் மேம்படுமுங்க. வெளிநாடு செல்ல அழைப்பு வருமுங்க! எதிரிங்க தொல்லை இருக்காது. சனீஸ்வர வழிபாடு நன்மையளிக்குமுங்க.

*(பணத்தைச் சிக்கனமா செலவு செய்யுங்க)*

**தனுசு:** தளராத மனம்

## தஞ்சை பரத்வாஜ்

கொண்ட தனுசு ராசி அன்பர்களே! உங்கள் வாக்கு மேன்மையடையும். தடைப்பட்ட திருமணம் நடக்கப்போகுது. வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. எதிர்பார்த்த இடமாற்றம் உண்டுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மை யளிக்குமுங்க.

*(இடமாற்றத்தோடு மன மாற்றமும் முக்கியம்...)*

**மகரம்:** போராட்ட குணம் நிறைந்த மகரராசி அன்பர்களே! எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. இல்லற வாழ்க்கைல அனுசரணையோடு நடந்துக்குங்க. உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில் இருக்குமுங்க. எதிர்பார்த்தபடி புதிய வேலை வாய்ப்புகள் வீடு தேடி வரும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மை யளிக்குமுங்க.

*(கவலைப்படாதீங்க... வேலைதான் வரப்போகுதே!)*

**கும்பம்:** பொறுமையுள்ளம் கொண்ட கும்பராசி அன்பர்களே! பணவரவு பெருகப் போகுதுங்க. வீடு, மனை வாங்க நல்ல நேரமுங்க. வாகன யோகமும் உண்டுங்க. உத்தியோகத்துல உயர்வு ஏற்படுமுங்க! வெளியூரிலிருந்து இனிப்பான செய்திங்க வரும். வாரந்தோறும் சனீஸ்வர வழிபாடு நன்மையளிக்குமுங்க.

*(நல்ல சுற்றுச்சூழல் உள்ள வீடாப் பார்த்து வாங்குங்க)*

**மீனம்:** கவனமாகச் செயல்படும் ஆற்றல் கொண்ட மீன ராசி அன்பர்களே! குழந்தைகள் மேல் கொஞ்சம் கவனம் செலுத்துங்க. வியாபாரம் நல்ல நிலையில் இருக்குமுங்க. புதிய தொழில் துவங்க நல்ல காலமுங்க. வேலை உயர்வும் உண்டுங்க! வெளிநாடு போவீங்க! புதிய பொருட்கள் வாங்கிக் குவிப்பீங்க. ராகு / கேது வழிபாடு நன்மை தருமுங்க.

*(குழந்தையை நல்ல ஸ்கூல்ல சேர்ப்பீங்க)*

**8.6.08 முதல் 14.6.08 வரை**



# சேனல்






# ''மேகலா ஜவ்வு மிட்டாயல்ல!''

சன் டி.வி.யின் டாப் சீரியலான 'மேகலா' டைரக்டர் விக்ரமாதித்யன், சீரியல்களின் போக்கு குறித்து நம்மிடம் பேசினார்.

''மேகலா சீரியல், ரெண்டு முறை டைம் மாத்தப்பட்டும் நல்ல ரேட்டிங்ல போயிட்டிருக்கு. ஒரு டைரக்டரா ரொம்ப திருப்தியா இருக்கேன். இந்த சீரியல் இழுக்கப்படற லிஸ்ட்ல இல்லைங்கறது நூறு சதவிகித உண்மை. ஏன்னா இதுல இயல்பு இருக்கு. எல்லா கேரக்டர்களையும் அதனதன் தேவைக்கேற்பதான் பயன்படுத்த முடியும். லீட் கேரக்டர் பண்ண சண்முகசுந்தரம் சார், மேகலால இப்ப இல்ல. அவ்வளவுதான் அவர் போர்ஷன். அவரே சந்தோஷமாத்தான் இதை ஏத்துக்கிட்டார்.

சீரியல்களுக்கு மவுசு குறைஞ்சு போச்சன்னு சொல்றதையும் நான் ஒப்புக்க மாட்டேன். கேம் ஷோக்கள், டாக் ஷோ, நடன நிகழ்ச்சிகளை மக்கள் ஆர்வமா பார்க்கறாங்க சரி, ஆனா அதனால சீரியலுக்கு எந்த அடியும் இல்ல. இது டி.ஆர்.பி ரேட்டிங் சொல்ற உண்மை.

காலப்போக்குல சீரியல்கள் இன்னும் பலவிதங்கள்ல ஜொலிக்கப் போறது உறுதி. குறும் படங்கள், டெலிஃபிலிம் எல்லாம் அதிகமாயிடும். வாரத் தொடர், மாதத் தொடர் வந்துடும். சினிமா மாதிரி இதுலயும் பரிசோதனை முயற்சிகள் வரும். சினிமாவைவிட சீரியல்ல இதை அதிகமா செய்யலாம்.

கார்ப்பரேட் கம்பெனிகள் சீரியல் எடுக்க வந்திருக்கறதும் ஆரோக்யமான விஷயம்தான். கொஞ்ச நாட்களுக்கு முன்னாடி ஸ்ட்ரைக் நடந்தப்போ, எவ்ளோ பேர் சாப்பாட்டுக்கு வழியில்லாம சினிமா, சீரியல் ஃபீல்டுல கஷ்டப்பட்டாங்கங்கறது ஊரறிஞ்ச உண்மை. அந்த நிலைமை இனியும் வரக்கூடாது. அதுக்கு கார்ப்பரேட் கம்பெனிகள் நிறைய வரணும். தொழில் சிறக்கணும். டெக்னீஷியன்கள், லைட்மேன்கள், மத்த வேலையாட்கள்னு சீரியல்கள்ல இன்னைக்கு வேலை வாய்ப்பு கொட்டிக் கிடக்கு. தகுதியானவங்களுக்கு, தங்கக் கம்பள வரவேற்பு நிச்சயம்.''

– திவ்யா

# பாண்டி

ஊரைச் சுத்தும் காற்றே,
உசிலம்பட்டி பக்கம் போனா
ஒண்ணும் சொல்லாதே!

- கவிஞர் நந்தலாலாவின் உருக்கமான பாடல் வரிகள் 'பாண்டி'யின் ஒட்டுமொத்த சோகத்தையும் வடிக்கின்றன.

அயல்நாட்டில் அவலம் அனுபவிக்கும் தமிழன், குடும்பக் கஷ்டம் போக்குவதற்காக அதைச் சகித்துக்கொள்ளும் யதார்த்த களத்தைத் தேர்வு செய்த படக்குழுவுக்குத் தென்றலாக ஒரு பாராட்டு - அதே கவனத்தைத் திரைக்கதை அமைப்பில் செலுத்தாததற்குப் புயலாக ஒரு குட்டு!

நடிகராக வளர்ச்சி யுற்றுள்ள நடன இயக்குநர் ராகவா லாரன்ஸின் கதாநாயக பர்ஃபார்மன்ஸுக்கும் ஸ்நேகாவின் சிலுசிலு நடிப்புக்கும் தென்றலாக ஒரு பாராட்டு!

ரசனைக்குறைவாக கதாநாயகியைக் குத்தாட்டம் போட வைத்ததற்காகப் புயலாக ஒரு குட்டு!

தொலைபேசியில் தங்கையின் கல்யாண மந்திர ஒலி கேட்டு மகிழ்வது போன்ற நயமான முத்திரைகளுக்கு தெ.ஒ.பா.!

குடும்ப செண்டிமெண்டை ஓவர்டோஸாகத் தரும் காட்சிகளுக்கு பு.ஒ.கு.!

நாஸரின் கனிந்த நடிப்புக்கும் சரண்யாவின் இலகுவான பொருந்துதலுக்கும் தெ.ஒ.பா.!

கரகாட்டத்துக்கு நமீதாவைப் போட்ட கோழைத்தனத்துக்கு பு.ஒ.கு.!

கஞ்சா கருப்புவின் நடிப்பு, ஸ்ரீகாந்த் தேவாவின் இசை, சுரேஷ் அர்ஸின் படத்தொகுப்பு - யாவுமே உசிலம்பட்டி பின்னணியை மறவாமல் அமைந்திருப்பதற்காக தெ.ஒ.பா.!

காமெடி டிராக்கை இன்னும் இழுத்துப் பின்னாததற்கு பு.ஒ.கு.!

பாண்டியைப் பாசத்துக்குரியவனாகப் படைத்த இயக்குநர் இராசு மதுரவனுக்கு தெ.ஒ.பா.!

அவனை மறக்க முடியாதவனாகச் செதுக்கும் வாய்ப்பை நழுவவிட்டதற்காக அதே இராசு மதுரவனுக்கு பு.ஒ.கு.!

- பெனினா






# கோபுர

தென்னாட்டின் ஆலய கோபுரங்கள் கட்டடத் தொழில் நுட்பமும் கலைநயமும் ஒருங்கிணைந்த அற்புதப் படைப்புகள்! அவற்றின் கம்பீரமான தோற்றத்தினால் அவை இராஜகோபுரம் என்று பெயர் பெற்றன போலும். இன்று நேற்றல்ல, பல நூற்றாண்டுகளாக நிமிர்ந்து நிற்கும் நம் நாட்டுக் கோபுரங்கள், நமக்குச் சொல்லும் செய்திகள் பல! நம் நாட்டை ஆண்ட ஒவ்வொரு அரச பரம்பரையும் தமக்கே உரிய முத்திரையை இந்தக் கோபுரங்களில் பதித்திருக்கிறது. ஒவ்வொரு கோபுரமும் ஒரு சரித்திரப் புத்தகம்!

தமிழ்நாடு என்றாலே வானளாவிய கோயில் கோபுரங்களே மக்களின் நினைவுக்கு வருகிறது. அதனால்தான் தமிழக அரசின் முத்திரையில் ஸ்ரீவில்லிபுத்தூர் கோபுரம் இடம் பெற்றிருக்கிறது.

கோபுரத்தின் அஸ்திவாரம் முதல் உச்சியில் பதித்த கலசங்கள் வரை, ஒவ்வொரு அங்குலமும் நம்மவர்களின் தொழில்நுட்ப வல்லமையையும் அறிவியல் ஞானத்தையும், கணித நூற்புலமையையும் எடுத்துக் காட்டுவதாய் விளங்குகிறது. கடற்கரைக் கோயில்கள், ஆற்றுப் படுகையில் அமைந்த கோயில்கள், சமவெளியில் எழுந்தவை, மலை உச்சியில் அமைந்தவை என்று அந்தந்த மண்ணின் தன்மைக்கு ஏற்ப அவற்றின் அஸ்திவாரங்கள் அமைக்கப்பட்டன. 'சாயில் இன்வெஸ்டிகேஷன்' என்னும் துறையில் எவ்வளவு திறமை இருந்திருக்க வேண்டும்! மேலே எழுப்ப வேண்டிய கோபுரத்தின் உயரத்துக்கு ஏற்ப அதன் கோணங்கள் வடிவமைக்கப்பட்டன. இன்றைய 'ஜியாமெட்ரி', 'ட்ரிக்னாமெட்ரி' வல்லுநர்கள் இவற்றின்

வடிவைக் கண்டு வியக்கிறார்கள். சுற்று வட்டாரத்தில் வீசும் காற்றின் வேகம், அங்கு நிலவும் தட்ப வெப்பம், பொழியும் மழை அளவு இவை அனைத்தையும் கருத்தில்கொண்டு, கட்டுமானப் பொருள்களைச் சேகரித்தார்கள் என்று கட்டடக் கலை வல்லுநர்கள் மூக்கிலே விரல் வைத்து ஆச்சரியப்படுகிறார்கள். இடி, மின்னல் போன்ற இயற்கைச் சீற்றங்களிலிருந்து பாதுகாக்க உச்சியில் இடிதாங்கிக் கருவிகளும் பொருத்தியிருக்கிறார்கள்! இவை மாபெரும் அறிவியல் சாதனையல்லவா?

சோழர் காலம் வரை, வாயிலில் உள்ள கோபுரம் சிறிதாகவும் கருவறை மேலுள்ள விமானங்கள் உயரமானதாகவும் அமைக்கப்பட்டு வந்தன. தஞ்சை, கங்கை கொண்ட சோழபுரம், திருபுவனம் கோயில்கள் இத்தகையவை. பின்னர் விமானம் சிறியதாகவும் கோபுரங்கள் பெரியதாகவும் கட்டப்பட்டன! விமானங்களிலும் பல வகைகள். 'தட்சிண மேரு' என்று புகழ் பெற்ற தஞ்சை பெரிய கோயில் ஒருவகை என்றால், தூங்கானை மாடம் என்னும் கஜபிருஷ்ட விமானங்கள், இன்னொரு வகை. (இவை யானையின் பின் பகுதி போல தோற்றம் அளிக்கும். சென்னையிலேயே பல கோயில்களில் இந்த வகை விமானங்கள் உண்டு. உதாரணத்துக்கு திருமுல்லை வாசல் கோயிலைச் சொல்லலாம்). ஸ்ரீரங்கம் கோயில் விமானமும் சிதம்பரம் கோயில் கனகசபையும் வெவ்வேறு வகை. திருப்பதி கோயில் விமானம் இன்னொரு வகை. வைணவ ஆலயங்களில் ஒவ்வொரு விமானத்துக்கும் ஒரு பெயர் உண்டு.

ஒரு ஊரை நெருங்கும்போதே கோபுரத்தைக் கண்டவுடன் கன்னத்தில் போட்டுக் கொள்கிறோம். கோபுரத்தைத் தரிசனம் செய்தாலே கோயிலைத் தரிசித்த புண்ணியம். சிவாலயங்களில் மூலஸ் தானத்தில் உள்ளது சூட்சுமலிங்கம். அதன் கோபுரம் ஸ்தூல லிங்கம்.

அந்தந்த ஊர்த் தலபுராணம், அங்கு உறையும் தெய்வங்களின் லீலைகள், மகிமைகள், இவற்றைச் சொல்லும் கதைச் சித்திரங்களாய் கதைச் சிற்பங்கள் கோபுரங்களின்மீது அமைக்கப்பட்டன. ஆகம முறைப்படி அமைய வேண்டிய அஷ்டதிக் பாலர்கள், அஷ்ட வசுக்கள், அஷ்ட மூர்த்தங்கள், யக்ஷ கின்னர கந்தர்வ வடிவங்கள், கோபுரம் தாங்கிகள், துவார பாலகர்கள் என்பவற்றைத் தவிர, உள்ளூர் மக்களின் வாழ்க்கை முறையைச் சித்திரிக்கும் பதுமைகளும் இவற்றில் இடம் பெற்றன. நின்று நிதானமாகப் பார்த்து ரசிக்கத்தான் நமக்குப் பொறுமையும் கண் பார்வையின் சக்தியும் இருப்பதில்லை!



ஸ்ரீரங்கத்தின் தெற்கு கோபுரம் சமீபகாலம் வரை, கல்ஹாரம் (அடிப்பாகம்) வரை மட்டுமே எழும்பியிருந்தது. அதனால் இதை

# கோட்பாடு

**த.கி. நீலகண்டன்**



மொட்டை கோபுரம் என்றே அழைத்தார்கள். அகோபிலமடத்து அழகிய சிங்கர், ஜீயர் சுவாமிகளின் திருவுள்ளத்தில் புகுந்து அரங்கன் தன் காரியத்தைச் சாதித்துக்கொண்டான். இன்று ஸ்ரீரங்கம் தெற்கு கோபுரம்தான் எல்லாவற்றிலும் உயரமானது. மொத்தம் 13 நிலைகள்.

கோபுரத்தின் உயரத்தைப் பொருத்து, ஒற்றைப்படை எண்ணிக்கையில் அதன் நிலைகள் (floors) அமைக்கப்பட்டன. மூன்று நிலையில் தொடங்கி, பதின்மூன்று நிலைகள் வரை கோபுரங்கள் உண்டு. உச்சியைச் சென்றடைய அதன் உட்புறத்திலேயே படிக்கட்டுகளும் உண்டு. வௌவால்களும் பிரம்மாண்டமான தேன் கூடுகளும் நம்மைப் பயமுறுத்தும்! இவற்றைக் கடந்து உச்சியில் ஏறிப் பார்த்தால் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை இயற்கை வனப்புகளையும், கான்க்ரீட் காடுகளையும் கண்டு ரசிக்கலாம். கீழேயிருந்து பார்த்தால் சிறியதாகத் தெரியும் கோபுரக் கலசங்கள், அருகேயிருந்து பார்க்கும் போது ஆள் உயரத்துக்கு நிற்கின்றன. வரகு, சாமை போன்ற தானியங்களை நிரப்பி இவற்றைப் பொருத்துவார்களாம். கும்பாபிஷேகம் என்பது இந்தச் செப்புக் கலசங்களுக்குச் செய்யும் அபிஷேகமே! வசதி மிகுந்த கோயில்களில் தங்கக் கலசமும் உண்டு.



தமிழகத்தில் இன்று சீரும் சிறப்புமாய் விளங்கும் கோயில்கள், நூற்றாண்டுகளைக் கடந்தும் கால வெள்ளத்தில் கரைந்து போகாமல் நிமிர்ந்து நிற்கின்றன. இவற்றை எழுப்பிய மன்னர்கள் வாழ்ந்த அரண்மனைகளின் சுவடுகூட இன்று இல்லை! சொந்த நலனில் காட்டிய அக்கறையை விட, பொது நலனில் அவர்கள் கொண்ட பரிவும் அக்கறையும் அதிகம் என்பதல்லவா இந்தக் கோபுரங்கள் சொல்லும் செய்தி!

*(நன்றி: பூவை ச.அருணவசந்தன்)*

# ஏர்டெல் டு சினிமா

**பா**ர்க்க படு ஸ்மார்ட்டாக இருக்கும் ரித்திக், ஏர்டெல்லில் மேனேஜராக வேலை பார்த்தவர். அழகா இருக்காரே சினிமாவுல நடிக்கலாமேன்னு பார்ப்பவரெல்லாம் உசுப்பேற்றிவிட, முடிவெடுத்து நுழைந்துவிட்டார். ஆரம்பமே ஜாக்பாட்தான்.



அடுத்தடுத்து மூன்று படங்கள் கையில். ''லெஃப்ட்னுதான் சொல்லணும். முதல் படமே ரிலீஸாகாதப்போ, மூணு படங்கறது நினைச்சே பார்க்க முடியாத விஷயம். ஆனா, நான் பயப்படலை. நம்பிக்கை இருக்கு... நல்லா பண்றேன்... முதல்ல ரிலீஸ் ஆகப் போறது 'மாணவன் நினைத்தால்'; தீக்குச்சி மாதிரிதான் ஸ்டூடண்ட்ங்கறதை நிரூபிக்கற கதை. அடுத்து 'காதல் ஓசை'; மென்மையான காதல் கதை. மூணாவது படம் 'வீர மாறன்'; ஆக்ஷன் சப்ஜெக்ட். புதுப்பையன்தானே ஏனோதானோன்னு நடிப்பான்னு நினைக்காதீங்க. எல்லாவிதமான பயிற்சிகளோட பக்காவா வந்திருக்கேன். சினிமாவோட கதவுகள் இன்னைக்கு எல்லாருக்கும் திறந்தாச்சு. நானும் போட்டி போடுவேன்'' என்று உற்சாகமாகப் பேசும் ரித்திக்குக்கு யதார்த்தமான நடிகராவதில்தான் அதிக விருப்பமாம்.

– ஷீபா

மின்னல் கதை

# பதினெட்டு ரூபாய்!

– யூ.பைஸ் அஹமத்



**நி**றைமாத கர்ப்பிணி சுவாதி, மூச்சு வாங்கியபடி நடக்கச் சிரமப்பட்டு வந்து கதவைத் திறந்தாள். எதிர்வீட்டுச் சிறுவன் பரமேஸ் நின்றிருந்தான். ''என்னடா இது?''

''அக்கா, இந்தாங்க! இதுலே பதினெட்டு ரூபா இருக்கு... நீங்க பால் வாங்கிக்குங்க!''

''எதுக்குடா...?'' புரியாமல் கேட்டாள்.

''இல்லேக்கா... நேத்து எங்க வீட்டுப் பூனை, உங்க வீட்டுலே பாலைக் குடிச்சிட்டுப் போயிடுச்சு. ஒரு பொருள் வைக்கற இடத்துலே வைக்கற மாதிரி இருக்கறதில்லே, பூனையை மருந்து வைச்சுச் சாகடிக்கணும்னு சத்தம் போட்டுக்கிட்டிருந்தீங்க!''

''ஆமாம்... அதுக்கு என்ன இப்போ?''

''நாலு நாள் முன்னாடிதான் பூனை குட்டி போட்டது. நீங்க மருந்து வச்சு, பூனை செத்துட்டா குட்டிங்க என்ன பண்ணும்? பாவமில்லே'' என்றதும் திடுக்கிட்டு நின்றாள் சுவாதி!

# கால் கிலோ காதல் அரை

ஜிலு ஜிலு தொடர்கதை - 10

ஷெல்டர் என்று பொதுவில் அறியப்பட்ட, காஃபி ஃபில்டர் மாதிரி இருந்த உயரமான கட்டடத்துக்கு இலங்கையிலிருந்து அகதிகளாக மக்கள் வந்து சேர்ந்த தினத்தில் ஆண்டிறுதித் தேர்வு குறித்த அறிவிப்பு வந்தது. பள்ளியில் சத்துணவுத் திட்டத்தைப் பார்வையிட எம்.ஜி.ஆர். ஜெயலலிதாவை அனுப்பி வைத்தார். ஆரஞ்சு நிறப் புடைவையில் அன்றைக்கு அவர் பள்ளி வளாகத்தில் இறங்கியபோது, பாண்டுரங்கன் சார் 'நானும் இன்னிக்கு ஆரஞ்சு கலர்' என்று பழனி வாத்தியாரிடம் தன் சட்டையைக் காட்டிச் சொன்னதை ஒட்டுக் கேட்டு, கலியமூர்த்தி வகுப்பில் ஒலிபரப்பினான். கவிதை எழுதும் ஆற்றல் படைத்த மோகன சுந்தரம், இது பற்றி எட்டு வரிகள் எழுதி எல்லோருக்கும் காட்டினான். கலர் கொடிகள் கட்டி, அனைவருக்கும் மிட்டாய் கொடுத்தார்கள். பத்மநாபன் தனக்குக் கிடைத்த சாக்லேட்டை வளர்மதியிடம் நீட்ட, அவள் ''தேங்ஸ் குடுமி, நீ சின்சியரா படிக்க ஆரம்பிச்சிட்டேன்னு கேள்விப்பட்டனே?'' என்று கேட்டாள்.

அவன் பதில் சொல்லவில்லை. தீர்மானம் செய்திருந்தான். வளர்மதியைக் கவர அது ஒன்றைத்தவிர வேறு வழியில்லை. நன்றாகப் படிப்பது; எப்படியாவது ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்குவது. இடைப்பட்ட காலங்களில், பன்னீர் செல்வத்தைப் பற்றி அவ்வப்போது வளர்மதி தன் தோழிகளிடம் குறிப்பிட்ட சில கருத்துகள் அவன் காதில் விழுந்திருந்தன. பன்னீர் நல்லவன்; பன்னீர் கெட்டிக்காரன்; பன்னீர் பெரியாள். என்னிக்கானா அவன நான் பீட் பண்ணிக் காட்டுறேன் பாரு. செகண்ட் ரேங்க் வாங்கும் வளர்மதிக்கு. அது ஒரு வேளை நெருங்கக்கூடிய தொலைவாகவே இருக்கலாம். பத்மநாபனுக்கு ஒரு விருப்பமாக அல்லாமல் வெறியாக அந்த எண்ணம் உருக்கொண்டது. கடைசியில் ஓடும் குதிரை முதலாவதாக வருவது, முடியாதா என்ன?

பன்னீர் வயிறெரிவான் என்கிற மகிழ்ச்சிக்குரிய தகவல் தவிர, வளர்மதி அப்போது தன் காதலை மறுக்க முடியாமல் போகும். சின்சியரான காதலன், ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்குபவனாகவும் இருப்பது அரிது. மாற்றியும் சொல்லலாம். ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்குகிறவர்களைப் பொதுவில் யாரும் காதலிப்பதில்லை. குறிப்பாக, பன்னீருக்கு அந்த பாக்கியம் கிடைக்க வாய்ப்பில்லை. ஆசிரியர்களால் அதிகம் விரும்பப்படும் பையன்களைப் பெண்கள் ஏறெடுத்துப் பார்ப்பதில்லை.

விதிகளை மாற்றுவதென்பது தன்னால் மட்டுமே முடியும். 'வளர்மதி, காத்திரு. இன்னும் ஒரே மாதம். இறுதித் தேர்வு நெருங்கிவிட்டது. பாடங்களிலும் காதலிலும். பத்தாம் வகுப்பு பி செக்ஷனுக்கு நீயும் நானும் காதலர்களாக உள்ளே நுழைவோம்.'

அவன் பேய்போல் உழைக்கத் தொடங்கினான். இங்கிலீஷ் க்ளாஸில் சொல்லிக் கொடுக்கிற அனைத்தையும் வீட்டுக்குப் போய் உடனுக்குடன் எழுதிப் பார்த்தான். அதிகாலை வேளையில் ரெட்டைக்குளத்து படிரோரம் ஒதுங்கி அமரும்போது, கையில் ஒரு துண்டுத்தாள் வைத்து கணக்குகளைப்

போட்டுப் பார்த்தான். பள்ளிக்குப் போகிற, வருகிற வழியிலெல்லாம் வரலாற்றுப் புத்தக வருஷங்களை உருப்போட்டான். ஞாயிற்றுக்கிழமை பம்ப்செட் திருவிழாவைத் தவிர்த்துவிட்டு, மொட்டை மாடிக்குச் சென்று உலவியபடி படிக்கத் தொடங்கினான்.

இதனாலெல்லாம் அவனது அம்மா மிகுந்த கவலைக்குள்ளாகி, ''உடம்புக்கு எதாச்சும் சரியில்லையா பத்து?'' என்று கேட்டாள்.

''த...சே... அவனை சொம்மா வுடு. புள்ள படிக்கதான்ல?'' என்று அப்பா அதற்குப் பதில் சொன்னது பெருமிதமாக இருந்தது. அவரைப் பொறுத்தவரை அவனொரு திருந்திய மாணவன். ஹெட் மாஸ்டர் அறையில்

# கிலோ கனவு

## பா.ராகவன்

ஞானம் பெற்றவன். இனி ஒருக்காலும் காதல், கொத்தவரங்காய் என்று போகமாட்டான்.

''டேய், அழியாத கோலம்னு ஒரு படம் வந்திருக்காம். போவலாமா?'' என்று ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை அபூர்வமாக அப்பாவே கேட்க, ''நீங்க போயிட்டு வாங்கப்பா. நான் படிக்கணும்'' என்று சொன்னான். ராஜலட்சுமி திரையரங்க மண்ணை மிதித்துச் சில வாரங்கள் ஆகியிருந்தன. இடையில் பன்னிரண்டு படங்கள் அங்கு வந்து போய்விட்டன. எத்தப் படமும் மூன்று நாளுக்கு மேல் கிடையாது. தூக்கி விடுவார்கள். ஒன்றுவிட்டு ஒன்றாவது பார்த்துவிடுவது வழக்கம். இப்படித் தொடர்ந்து புறக்கணித்து, சாதித்தாக வேண்டியிருக்கிறது. தியாகங்கள் இல்லாமல் சாதனைகள் இல்லை.



அவனது தோழர்களுக்கு இந்த மாற்றங்கள் முதலில் புலப்படவில்லை. அதே ஆறாவது பெஞ்சில் அமர்ந்திருக்கிற பத்மநாபன், சகஜமாகத்தான் பேசுகிறான்; பழகுகிறான்; வழக்கம்போலவே அவனது பார்வை எப்போதும் வளர்மதியின்மீது

இருக்கிறது; அவ்வப்போது போரடித்தால், பெருமாள் சாமியைத் திரும்பிப் பார்த்து முறைத்துக்கொள்கிறான். ஆனால், அவன் வளர்மதியை அணுகி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை என்பது மற்றவர்களின் கவனத்துக்கு வரவில்லை.

நைன்த் 'பி'யில் மேலும் சில காதலர்கள் பிறந்தார்கள். கலியமூர்த்தி, தன் முயற்சியில் சற்றும் மனம் தளராமல் நான்காவது பெண்ணாக காஞ்சனாவைக் காதலிக்கத் தொடங்கி, மோகனசுந்தரத்திடம் கவிதை எழுதப் பயிற்சி எடுத்துக் கொள்ள ஆரம்பித்தான். பன்னீரும் அவனது குழுவில் இருக்கும் (தேர்ட் ரேங்க்) முத்துக்குமாரும் ராஜாத்தியைக் காதலிக்கலாம் என்று ஒரே சமயத்தில் முடிவு செய்ய, இருவருக்குமான நட்பில் விரிசல் ஏற்பட்டது. ராஜாத்தி, முத்துக்குமாரை 'போடா பன்னாட' என்று சொல்லிவிட்டதாக ஒரு புரளியை குண்டு கோவிந்தன் கிளப்பிவிட, இருவரும் சத்துணவுக்கூடத்துக்குப் பின்புறம் இருக்கும் திறந்தவெளியில் கட்டிப் புரண்டு சண்டை போட்டார்கள். ராஜாத்தி இதனைப் பார்த்து ரசித்துப் பாராட்டினாள். அதுநாள் வரை யாரையுமே காதலித்திராத அஞ்சாவது ரேங்க் சிவசுப்பிரமணியன்கூட, ஒன்பதாம் வகுப்பு 'சி' செக்ஷனில் இருக்கும் ரேவதியைக் காதலிக்கத் தொடங்கினான்.

இறுதித் தேர்வு நெருங்கிய நேரத்தில் இவ்வாறாக உலகம் இயங்கிக் கொண்டிருக்க, தான் மட்டும் ரகசியமாக ஒரு பெரும் யுத்தத்துக்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்வது பற்றிய நியாயமான பெருமிதம் பத்மநாபனுக்கு இருந்தது. தொடக்கத்தில் சிரமப்பட்டான் என்றாலும், விடாமல் படிக்கப் படிக்க, புரியாத பாடங்களெல்லாம் புரிய ஆரம்பித்தன. தப்பித்தவறி ஒருவேளை ஃபர்ஸ்ட் ரேங்க் வாங்கிவிடுவோமோ என்று அவனுக்கே அவ்வப்போது சந்தேகம் ஏற்படத் தொடங்கியது.

இனிப்பாக, சுவையாக இருந்தது அந்த நினைவு. அது மட்டும் சாத்தியமாகிவிட்டால், உலகில் வேறு எதுவுமே சிரமமில்லை. முதல் ரேங்க் மாணவனின் காதலும்கூட முதல் தரமானதாகவே கருதப்படும். அப்பாவைப் பற்றி இனி பிரச்னையில்லை. கௌதம புத்தருக்கு அடுத்தபடியாக பத்மநாபன்தான் என்கிற கருத்தில் மாற்றமே வராது அவருக்கு. வகுப்பிலும் விசேஷ கவனம் உண்டாகும். பன்னீர் பயப்படுவான். மகாலிங்க வாத்தியார் வியப்பில் வாய் பிளப்பார். 'நீயாடா குடுமி? நீயாடா குடுமி?' என்று பார்க்கிற முகங்களெல்லாம் பரவசப்படும்.

அது முக்கியமில்லை. 'ஐ லவ்யூ குடுமி.' வளர்மதி சொல்ல வேண்டும். சொல்வாள். கண்டிப்பாகச் சொல்வாள். சொல்லாமல் எங்கே போய்விடுவாள்? அவள் தன்னை வெறுக்கவில்லை என்பதே அவள் விரும்புவதற்கு நிகரானதல்லவா?



இறுதித் தேர்வு தினத்துக்கு ஒரு வாரம் முன்னதாக பத்மநாபனுக்கு ஓர் எண்ணம் எழுந்தது. ஒரு தாளை எடுத்து இரண்டு வரி எழுதினான். 'முழுப்பரீட்சையில் போட்டி உனக்கும் பன்னீருக்கும் அல்ல. எனக்கும் உனக்கும்தான். இப்படிக்கு உன் குடுமிநாதன்.'

எழுதிவிட்டு ஒருமுறை சரிபார்த்தான். குடுமிநாதன் என்பதை ஸ்டிராங்காக இரட்டை அடைப்புக்குறிகளுக்குள் திணித்தான். மடித்து பாக்கெட்டில் வைத்துக் கொண்டான். வெகுநேரம் யோசித்து, வளர்மதி வீட்டுக்குப் போய் அதை டோர் டெலிவரி செய்துவிட்டு வரலாம் என்று அவன் முடிவு செய்து கிளம்பியபோது, மணி இரவு பத்தாகியிருந்தது.

அவன் இப்போது படிக்கிற பையன் என்பதால், மொட்டைமாடியில் அவனுக்காக அப்பா ஒரு மின் விளக்கு ஏற்பாடு செய்து தந்திருந்தார். குட்டியாக ஒரு மேசை நாற்காலியும்கூட. ஒரு அரைமணி நேரம் அவன் வெளியில் போய்விட்டு வருவது இப்போது பெரிய பிரச்னையாகாது. படிக்கிற பையன். ஏதாவது யோசித்தபடி உலவப் போயிருப்பான்.

புறப்பட்டான். சர்ர்ர்ர்ர் என்று நூல் பிடித்தமாதிரி ஓடி, வளர்மதி வீட்டு வாசலில் சென்று நின்றான். மூச்சு விட்டுக் கொண்டான். கதவு மூடியிருந்தது. உள்ளே விளக்குகள் அணைக்கப்பட்டிருந்தன.



''கோயில் மணியை அடிச்சதுக்கா உன் புள்ளைக்கு பஞ்சாயத்துல அபராதம் போட்டாங்க?''

''பின்னே, கோயில்ல இருக்கற மணி, பெரிய குருக்களோட புள்ளையாச்சே!''

- வெ.சீதாராமன்

பொதுவாக, உப்பள முதலாளிகள் ஒன்பது மணிக்கு மேல் விழித்திருப்பதில்லை. இதனாலேயே ராஜலட்சுமி திரையரங்கில் கூட மாலைக் காட்சியை ஐந்தே முக்காலுக்கு ஆரம்பித்து எட்டேகாலுக்கெல்லாம் முடித்துவிடுவார்கள். அதன் பிறகு ஒருமணி நேரம் இடைவெளி விட்டு, விடலைகளுக்கான இரவுக் காட்சியை ஒன்பதரைக்கு சாவகாசமாகத் தொடங்குவார்கள்.

உணர்ச்சி வேகத்தில் புறப்பட்டு வந்தானே தவிர, என்ன செய்வது, எப்படி அவளைப் பார்ப்பது என்றெல்லாம் யோசித்திருக்கவில்லை. திருடன் என்று யாராவது தன்னைப் பிடித்துவிடுவார்களோ என்றும் பயமாக இருந்தது. கட்டைல போற வீரபத்திரன் பார்த்துவிட்டால் வேறு வினையே வேண்டாம்.

என்ன செய்யலாம்?

வீட்டின் வலப்புறம் இரண்டாவதாக இருந்த ஒரு ஜன்னல் மட்டும் இலேசாகத் திறந்திருப்பதுபோல் தெரிய, அருகே சென்று மெல்லத் தொட்டு இழுத்துப் பார்த்தான். திறந்துதான் இருந்தது. பயமாக இருந்தது. இருட்டில் பதைப்புடன் கண்ணைப் பழக்கிக்கொண்டு உள்ளே பார்க்க, சன்னலோரக் கட்டிலில் ஒரு நாய்க்குட்டி பொம்மை மட்டும் இருக்கக் கண்டான்.

சந்தேகமில்லை. இது வளர்மதியின் அறைதான். வகுப்பில் அவள் தன் நாய் பொம்மை குறித்துப் பல சமயம் சொல்லியிருக்கிறாள். அமெரிக்காவிலிருந்து அவளது மாமா வாங்கி வந்து கொடுத்த புசுபுசு நாய் பொம்மை. அதைக் கட்டிக்கொண்டுதான் வளர்மதி தூங்குவாள்.

ஆனால், கட்டிலில் பொம்மை மட்டுமல்லவா இருக்கிறது? வளர்மதி எங்கே?

துடித்துப் போய்விட்டான். ஒரு முயற்சி வீணானதுகூடப் பெரிதில்லை. வளர்மதி இந்த நேரத்தில் எங்கு போயிருப்பாள்? அமெரிக்க நாய்க்குட்டி பொம்மை இல்லாமல் அவளுக்குத் தூக்கம் வராதே?

மறுநாள் அவள் பள்ளிக்கு வராதது மேலும் குழப்பமளித்தது; அடுத்தநாளும்; அடுத்த நாளும்.

வளர்மதிக்கு என்னவோ ஆகிவிட்டது. கடவுளே, என்ன அது?

அவ்வளவுதான். படிப்பைப் பையில் போட்டு எடுத்து வைத்தான். தன் மான சீகத்தில் அழ ஆரம்பித்தான்.

**(தொடரும்)**

# போஸ்டர்

கே.ராமச்சந்திரன்

**ரா**மசாமி ஏற்கெனவே டென்ஷன் பார்ட்டி. ரிட்டயர்ட் ஆனபின், அது அதிகம் ஆனதுதான் மிச்சம்!

தன் வீட்டு காம்பவுண்ட் சுவரில் யாராவது போஸ்ட்டர் ஒட்டியிருந்தால், அன்று பூராவும் தாம்தூம்தான்! அதைக் கிழித்துப் போட்டாலும் அவரது டென்ஷன் குறையாது.

இப்போ தேர்தல் சமயம். அன்றும்



அப்படித்தான். ஏதோ ஒரு கட்சி, இரவோடு இரவாக போஸ்ட்டரை ஒட்டிவிட்டது. காலையில் பார்த்தவர் ருத்ர தாண்டவம் ஆடிவிட்டார். காஃபிகூடக் குடிக்காமல் காலை ஏழு மணி சுமாருக்கு, நாலுக்கு ஆறு என்று இருந்த போஸ்ட்டரைக் கிழித்து எறிந்தார்.

வழக்கம்போல் காலையில் குளித்து, டிஃபன் சாப்பிட்டுவிட்டு டீ.வி. பார்த்துக் கொண்டிருந்தவரைக் கூப்பிட்டு,

''ஏன் ஒட்டின போஸ்ட்டரைக் கிழிச்சீங்க? ஒரு போஸ்ட்டர் என்ன விலை தெரியுமா?'' கும்பலுடன் வந்தவன் கேட்டான்.

ஏதோ பிரச்னை வரப் போகிறது என்று உள்மனம் சொல்ல, அமைதியாய் இருந்தார்.

''பதில் சொல்லுங்க சார்!''

'போவ்! என்னய்யா பதில் வேணும்? என் வீடு! என் காம்பவுண்ட்' என்று சொல்லத்தான் நினைத்தார்... ஆனால், சொல்ல முடியுமா என யோசித்தார்.

அப்போது அவர் மனைவி அங்கு வந்து அவர்களிடம் கூறினார்.

''அண்ணே! நான்தான் கிழிக்கச் சொன்னேன்!''

அண்ணன் பட்டம் கிடைத்தவுடன் கொஞ்சம் அமைதியானது கும்பல். அவன் தொடர்ந்தான். ''கடந்த மூணு எலெக்ஷனுக்கும் நீங்க இங்க போஸ்ட்டர் ஒட்டினீங்க. மூணு முறையும் தோத்துட்டீங்க. இது ராசி இல்லாத சுவரு. அதனால இந்தத் தடவை நீங்க ஜெயிக்கணும்னா இங்க போஸ்ட்டர் இருக்கக் கூடாது! நாங்க போடற வோட்டு வீணா போறது பிடிக்கலே! நீங்க ஜெயிக்கணும்! அதான் கிழிக்கச் சொன்னேன்!''

''நீங்க நம்ம கட்சி ஆளுன்னு சொல்லக்கூடாதா சார்?'' என்றபடி நகர்ந்தது கூட்டம்.

# நீங்கள் கேட்டவை -தராசு

● எஸ்.கருணையானந்தம், உசிலம்பட்டி

? எல்லா அரசியல் கட்சிகளுமே நாட்டு நலனைவிட வோட்டு நலனை எண்ணித்தானே செயல்படுகின்றன?

! வோட்டு நலன் மட்டுமில்லீங்க! தங்கள் வீட்டு நலனைக் கருதாமல் அவர்கள் எதையும் செய்வதில்லை!

● கணேஷ்வாணன், கூடுவாஞ்சேரி

? தமிழக தி.மு.க. கூட்டணி அரசை 'மைனாரிட்டி தி.மு.க. அரசு' என்று அழைக்கும் ஜெயலலிதா, கர்நாடக மாநிலத்தில் தற்போது சுயேச்சைகளின் ஆதரவுடன் அமைந்துள்ள பா.ஜ.க. அரசையும் அப்படியே அழைப்பாரா?

! ஜெயலலிதா அப்படிப் பேச முடியாது; கூடாது! மூன்று குறைவுக்கும் 22 இடங்கள் குறைவு என்பதற்குமிடையே வித்தியாசம் உண்டு. இது ஒருபுறமிருக்க, கர்நாடகத்தில் நடப்பது சுயேச்சைகள் பங்கேற்கும் கூட்டணி ஆட்சி. தமிழகத்தில் நடப்பதோ, வெளியே இருந்து ஆதரவு தருவோர் பலத்தில் நடக்கும் மைனாரிட்டி ஆட்சி. இங்கே ஜனநாயகமே தோற்றுப் போயிருக்கிறது.

● ச.நாகரத்தினம், திருப்பூர்

? குஜ்ஜார் மக்களின் போராட்டத்துக்கு, பல நாட்களாக துப்பாக்கிக் குண்டுகளையே பதிலாகக் கொடுக்கும் அரசின் போக்கு மனவேதனை தருகிறதே சார்...?

! போராட்டம் என்ற பெயரில் குஜ்ஜர்கள் ரயில் தண்டவாளங் களைப் பெயர்த்து

● பாதிக்காத தோல்வி!

## வாட்டாள் நாகராஜ் தோற்றுவிட்டாரே?



● நேர்மை நாயகன்!



• கல்ட்டி...



• — நாடகம்!

• வோட்டு பலம்!



எடுப்பது, அதைவிட மனவேதனை அளிக்கிறது. ஜாதி, மதம், இனம் என்றெல்லாம் முத்திரை குத்தி, மக்களைப் பின்தள்ளுவது எவ்வளவு கொடுமைகளில் கொண்டு போய்விடும் என்று எச்சரிக்கை செய்யும் சம்பவங்கள் இவை.

● **என்.வி.எஸ்.மணிமாறன், நெய்வாசல்***

***? ரூபாய்க்கு இரண்டு கிலோ அரிசி, இலவச கலர் டீ.வி. என்று அறிவித்தும் கர்நாடகத்தில் காங்கிரஸால் ஆட்சியைப் பிடிக்க முடியவில்லையே?***

! தமிழ்நாட்டு நிலவரத்திலிருந்து மக்கள் பாடம் கற்றுக்கொண்டிருக்கிறார்கள் போலும். ஏமாந்து போகவில்லை!

● **என்.காளிதாஸ், சிதம்பரம்**

***? 'முஷாரஃப் பதவி விலகாவிட்டால் அவர் மீது கண்டனத் தீர்மானம் கொண்டுவரப்படும்' என்கிறாரே ஜர்தாரி?***

! முஷாரஃபுக்கு, அவரால் மாற்றி அமைக்கப்பட்ட சட்டம் துணை நிற்கிறது. ஜர்தாரிக்கு, மக்கள் ஆதரவு பலம் அளிக்கிறது. எப்படியும் தமது பதவி நாட்கள் எண்ணப்பட்டு வருகின்றன என்பதைப் புரிந்து கொண்டு, முஷாரஃப் கௌரவமாகப் பதவி விலகுவது அவருக்கு நல்லது. அவர் மீது கிரிமினல் நடவடிக்கைகள் ஏதும் எடுக்காமல் பெருந்தன்மை காட்டுவது ஜர்தாரிக்கும் நவாஸ் ஷரீஃபுக்கும் நல்லது.

● **ஆர்.பிரகாஷ், பொன்மலை**

***? வாட்டாள் நாகராஜ் தோற்றுவிட்டாரே?***

! அவர் தோற்றால் என்ன? யெதியூரப்பா ஜெயித்து விட்டாரே! நாகராஜை விடவும் அதிகமாக பிராந்தியப் பித்துப் பிடித்துச் சிறுகிறாரே!

● **சி.மகேஷ், திருச்சி - 17**

***? உங்களைக் கவர்ந்த ஐ.பி.எல். நாயகன் யார்?***

! (1) பித்துப் பிடிக்காமல் தப்பித்த கிரிக்கெட் ரசிகர். (2) சென்னை அணிக்கு எதிரான அரையிறுதிப் போட்டியில் பந்தை எதிர்கொண்ட போது, இலேசாக மட்டையில் உரசிச் சென்றது; அம்பயர் உட்பட யாருமே கண்டு கொள்ளாத போதும், 'அவுட்' ஆனதற்கு அடையாளமாக நடையைக் கட்டிய சங்ககாரா.

● **ராஜாராம், கோவை**

***? 'சேது சமுத்திர திட்டத்துக்கு சேதுராம் எனப் பெயரிட்டு நிறைவேற்றலாம்' என தமிழக முதல்வர் யோசனை கூறியுள்ளாரே?***

! உச்சநீதிமன்றத் தீர்ப்புக்குக்கூட காத்திராமல் சேது சமுத்திர திட்டத்துக்காகப் போராட தி.மு.க. தொண்டர்களை அழைக்கும் கருணாநிதி, மறுபுறம் 'ராம் ராம் சேதுராம்!' பஜனை செய்வது, ருத்திராட்ச பூனை

☐ **ரூ.100/- பரிசு பெறுபவர் :**

**கணேஷ்வாணன், கூடுவாஞ்சேரி**



✱ போடாத மார்க்!



✱ மைனாரிட்டி மகிழ்ச்சி

✱ சட்ட சப்போர்ட்!



யைத்தான் மக்களுக்கு நினைவூட்டும்!

● டி.முருகேசன், திருவாரூர்

? அரசு மருத்துவமனையில் மருந்தோ டாக்டரோ இல்லாமல் உயிரிழப்பு நேர்ந்தால், அது நமக்கு அவமானம் என்கிறாரே முதல்வர்?

! அப்ப மட்டும்தானா அவமானம்? தரக்குறைவான தடுப்பூசி மருந்துகளாலும் டாக்டர்களின் கவனக்குறைவாலும், சிசுக்கள் மரணமடைகிறபோதும் அவமானம் இல்லையா என்ன!

● வெ.நா.சிவகுமார், சென்னை - 33

? முதலமைச்சர் கருணாநிதியின் கோரிக்கையை ஏற்று, தமிழகத்தில் திருச்சி, திருவாரூர், கோவை ஆகிய நகரங்களில் மத்திய பல்கலைக் கழகங்கள் அமைக்கப்படுவது குறித்து...?

! இந்தப் பல்கலைக் கழகங்களுக்கு கருணாநிதியின் பெயரைச் சூட்டவும் மத்திய அரசு முன் வரலாம்! பலமான அஸ்திவாரம் இன்றிப் பல மாடிக் கட்டடம் எழுப்புகிறார்கள். நாட்டில் ஏராளமான பள்ளிக்கூடங்கள் மேல் கூரையோ, கரும் பலகையோ, அல்லது நல்லாசிரியரோ இல்லாமல் தவிக்கும்போது, மத்திய பல்கலைக் கழகங்களில் கவனம் செலுத்துவது ஆபத்தானது.

● த.புகழேந்தி, கூகூர்

? ஒகேனக்கல் கூட்டுக் குடிநீர்த் திட்டத்துக்காக மத்திய அரசுக்கோ கர்நாடக அரசுக்கோ கடிதம் எழுத வேண்டிய அவசியம் இல்லை என தமிழக முதல்வர் கூறியிருப்பது பற்றி...?

! இங்கே கலைஞர் எடுத்தெறிந்து பேசுகிறார்; அங்கே யெதியூரப்பா எகிறிக் குதிக்கிறார். காத்திருக்கிறது காவ்ட்லி நாடகம்!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? 240 ஆண்டு கால மன்னராட்சிக்குப் பிறகு, நேபாளம் குடியரசு நாடாக மலர்ந்திருப்பது பற்றி...?

! உண்மையான குடியரசாக மக்கள் நலனுக்காக இயங்கினால் உலகம் வாழ்த்தும்; மாவோ குடியரசாக குருட்டுக் கொள்கைகளைத் திணித்தால், நேபாளத்தின் ஹிந்து அந்தஸ்து போய்விட்டதற்காக வருந்துகிற மத அடிப்படைவாதிகளின் வாய்க்குச் சர்க்கரை போட்டதாகிவிடும்.

● என்.சங்கரதாஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்

? இரண்டு ஆண்டுகால தி.மு.க. ஆட்சிக்கு மார்க் போட்ட ராமதாஸ், நான்காண்டு கால ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சிக்கு மார்க் போடாதது ஏன்?

! இங்கே தி.மு.க. மைனாரிட்டி ஆட்சி நடப்பதாலும் அங்கே ஐக்கிய முற்போக்குக் கூட்டணி ஆட்சியில் பா.ம.க.வும் ஐக்கியமாகியிருப்பதாலும்தான்!

★ரூ.50/- பரிசு பெறுபவர் :

என்.வி.எஸ்.மணிமாறன், நெய்வாசல்




பொதுவா, விஜய் அவனோட அப்பாவை முகத்துக்கு நேரா பாத்துப் பேசாத பிள்ளை. இப்படிப் பேச அவனுக்கு எங்கிருந்து தைரியம் வந்துச்சு? அதுவுமில்லாம, ஒரு மன மாற்றத்துக்காகத்தான் அவர் விஜய்யைக் குழந்தை நட்சத்திரமா நடிக்க வச்சாரே தவிர, அவனைப் பெரிய நடிகனாக்கணும்னு எல்லாம் எண்ணமே இல்லை. அதுவும் ஹீரோவா.

''அப்போ படிப்பு என்ன ஆகறது?'' என்று என் கணவர் கேட்டார்.

''பேஸிக்கா என்ன படிக்கணுமோ அதை நான் படிச்சுட்டேன். அது போதும். இப்போ நான் நடிச்சே ஆகணும்'' அவன் பதில்ல உறுதி தெரிஞ்சது. அதுக்கு அப்புறம் என் கணவர் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். அவன் கேட்கலை. திரும்பத் திரும்ப சலிச்ச மாவையே சலிக்கிற மாதிரி 'நடிக்கணும்! நடிக்கணும்'னு சொல்லிக்கிட்டு இருந்தான். ஒரு கட்டத்துல என் கணவருக்குக் கோபத்தை அடக்க முடியல. அவன் கன்னத்துல 'பளார்'னு அறைஞ்சுட்டார். அவன் பதிலே பேசலை. வெளியே போயிட்டான். வெளியே போனவன் ஒரு லெட்டர் எழுதி வைச்சுட்டுப் போனான். 'நான் வெளியே போறேன். தேடாதீங்க!' அவ்வளவுதான். படிச்சுப் பாத்துட்டு நாங்க பதறிப் போயிட்டோம். எங்கெங்கேயோ தேடினோம். அவனைக் கண்டுபிடிக்க முடியல. காலேஜ், அவன் அடிக்கடி போற ஃப்ரெண்ட்ஸ"ங்க வீடு... எங்கயும் அவன் இல்ல. அப்புறம் உதயம் தியேட்டர் ஞாபகத்துக்கு வந்தது.

என் கணவர் காரை எடுத்துக்கிட்டு உதயம் தியேட்ட

நான்

ருக்குப் போனார். அடிக்கடி போறதால தியேட்டர் மேனேஜருக்கு விஜய்யை நல்லாத் தெரியும். அவர் என் கணவரிடம், 'விஜய் உள்ளதான் இருக்கான்'னு சொல்லிட்டார். விஜய் உள்ளே உக்காந்து படம் பாத்துக்கிட்டு இருந்தான். பிரபுவும் குஷ்புவும் நடிச்ச 'கிழக்குக் கரை'ங்கற படம். என் கணவர் போய்க் கூப்பிட்டி ருக்கார்.

'இங்ககூட என்னை நிம்மதியா இருக்க விடமாட்டீங்களா? படம் முடிஞ்சுதான் வெளியே வருவேன்'னு சொல்லியிருக் கான். என் கணவர் பதில் பேசாம படம் முடியற வரைக்கும் அவன் பக்கத்துலயே உக்காந்திருக்கார். படம் முடிஞ்சதும் வீட்டுக்குக் கூட்டிட்டு வந்தார்.

வீட்டுக்கு வந்ததுக்கு அப்புறம்கூட அவன் சினிமாவுல ஹீரோவா நடிக் கணும்ங்கற ஆசையை விடலை. ஆனா, என் கணவருக்கு அதுல ஆர்வமே இல்லை. நான்தான் அவர்கிட்ட விஜய்யை விட்டுக் கொடுக்காமப் பேசினேன்.

''எத்தனையோ பேரை நீங்க சினி மாவுல அறிமுகப்படுத்தியிருக்கீங்க. அவங்க எல்லாரும் நல்லாத்தானே இருக் காங்க? ஒரு முயற்சிதான் செஞ்சு பாப் போமே! இவனையும் அறிமுகப்படுத் துங்க''ன்னு சொன்னேன். கடைசியில என் கணவர் ஒரு முடிவுக்கு வந்தார். விஜய் யைக் கூப்பிட்டார்.

''சரி, நான் உன்னை ஹீரோவா நடிக்க வைக்கறேன். அதுக்கு முன்னால நீ எனக்கு எதையாவது நடிச்சுக் காமி.''

அவரு எப்படா சொல்லுவாருன்னு காத்திருந்த மாதிரி விஜய் நடிச்சுக் காட்டி னான். 'அண்ணாமலை' படத்துல ரஜினி சார், ராதாரவி சார்கிட்ட தொடையைத் தட்டிப் பேசுவாரே, அந்த நீளமான வசனம் அதைப் பேசினான். அப்படியே பாவம் மாறாம ரொம்ப நல்லா நடிச்சான். என் கணவர் அசந்துட்டார். 'பரவாயில்லையே! இவன்கிட்ட ஏதோ இருக்கு'ங்கற எண்ணம் எங்க ரெண்டுபேருக்கும் வந்தது. 'சரி, இவனை நடிக்க வைக்கலாம்'ங்கற முடிவுக்கு ரெண்டுபேரும் வந்தோம்.

ஆழ்வார்பேட்டைல இருக்கற ஒரு ஸ்டுடியோவுல வச்சு, விஜய்க்கு ஒரு மேக்கப் டெஸ்ட் எடுத்தோம். பாக்கறதுக்கு



**ஷோபா சந்திரசேகர்**

ரொம்ப சின்னப் பையன் மாதிரி இருந்தான் விஜய். தோள் நல்லா அகலமா விரிஞ்சு இருந்தாலும், முகம் ரொம்ப சின்னதா இருந்தது. ராதாரவி சார் சொன்னார்: ''ஆள் நல்லாத்தான் இருக்கான். ஆனா, முகத்துல மெச்சூரிட்டியைக் காணோமே!'' ஆனாலும் நாங்க எங்களோட தீர்மா னத்துலருந்து பின் வாங்கலை.

விஜய்யை வைச்சு என் கணவர் 'நாளைய தீர்ப்பு'ன்னு ஒரு படம் பண்ணி னார். அதுதான் விஜய் ஹீரோவா நடிச்ச முதல் படம். முதல் நாள் ஷூட்டிங்லயே ரொம்ப கனமான காட்சியா அமைஞ்சு

# நடிச்சே ஆகணும்...!



போச்சு. ராதாரவி சார், ஸ்ரீவித்யா ரெண்டு பேரும் எவ்வளவு காலமா நடிக்கறாங்க? எவ்வளவு பெரிய திறமைசாலிங்க? அவங்களோட நடிக்கற காட்சி. நாங்க ரொம்பப் பயந்துக்கிட்டே இருந்தோம்.

ஆனா, நாங்களே நினைச்சுப் பாக்கலை, விஜய்கிட்ட இவ்வளவு திறமை இருக்கும்னு. ரொம்ப நாள் சினிமாவுல நடிக்கறவன் மாதிரி, இயல்பா, நல்லா நடிச்சுட்டான். ஷூட்டிங் முடிஞ்சதும், ''அவன்கிட்ட ஒரு ஃபயர் இருக்கும்மா. ரொம்பப் பெரிய ஆளா வருவான்''னு ராதாரவி சார் சொன்னார். இப்போ நினைச்சுப் பாக்கறப்போ அவர் சொன்னது எவ்வளவு உண்மைன்னு எனக்குப் புரியுது.

**வி**ஜய் முதன்முதல்ல நடிச்சுக் காமிச்ச ரூம் இன்னும் அப்படியே இருக்கு. அந்த ரூம்ல இருக்கற கண்ணாடி முன்னால நின்னுக்கிட்டுதான் அவன் வசனம் பேசி, தனக்குத்தானே நடிச்சுப் பாத்துக்குவான். இவ்வளவு காலம் கழிச்சு அந்த ரூமைக் கொஞ்சம் மாத்தி வடிவமைக்கலாம்னு யோசிச்சோம். அவன்கிட்ட சொன்னோம். விஜய் கூடாதுன்னு சொல்லிட்டான். அந்த ரூம்ல இருந்த எல்லாப் பொருட்களும் இருக்கற இடத்துல அப்படியே இருக்கணும்னு சொல்லிட்டான்.

## என்ன பரிசு?

- சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்...
- குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...




விஜய்க்கு கடவுள் நம்பிக்கை இருக்கு. அடிக்கடி சர்ச்சுக்குப் போவான். அதுவும், புதுப்படம் ரிலீஸ் ஆகுதுன்னா, அவன் போகற சர்ச் ஒண்ணு இருக்கு. அது எந்த சர்ச்? அடுத்த வாரம் சொல்றேன்.

(தொடரும்)

எழுத்து வடிவம் : **பாலு சத்யா**

ஹலோ வாசகர்களே!

**ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. இரண்டாவது, மூன்றாவது வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!**

- விஜய் வின்னர்ஸ் - 3 தொடர் சங்கிலிப் போட்டிக்கான முடிவும், இந்த வார கூப்பனும் பக்கம் - 88ல் உள்ளன.
- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்ச கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம் 88-ஆம் பக்கம் இருக்கு)
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.

கடந்த வார கல்கி இதழில் (8.6.08) விஜய் வின்னர்ஸ் தொடர் சங்கிலிப் போட்டியில் கூப்பன் எண் - 5 என்று அச்சாவதற்குப் பதிலாக 4-என்று தவறுதலாக அச்சாகியிருக்கிறது. அதை 5-என்று பாவித்துக் கொண்டு அதனுடன் இனி வரும் கூப்பன்களையும் சேகரிக்கவும்! (இந்தத் தவறுக்கு ரொம்ப ரொம்ப ஸாரி)

- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்க நகரத்து ஏஜெண்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம். ஸோ, டயல் : 4343 8888
- போட்டி குறித்த இறுதி முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- போட்டியில் கலந்துக்கங்க; பரிசுகளை அள்ளுங்க!



# விஜய் வின்னர்ஸ்-3

## தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. பி.புவனேஷ், தஞ்சாவூர்
2. அமுதா பிரகாஷ், தஞ்சாவூர்
3. எஸ்.சபரிநாதன், தருமபுரி
4. அ.ஞான பாஸ்கரன், நெல்லிக்குப்பம்
5. வி.ஸ்ரீராம், திருச்சி - 6
6. வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி
7. ஜி.எஸ்.வெங்கடேசன், குடியாத்தம்
8. ஜி.பாரதி,நெல்லிக்குப்பம்
9. அ.நிலவர் நிஸா, நெல்லை
10. கே.கே.வெங்கடேசன், வேலூர்-1

* முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.

* குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப் பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 19.06.2008

1. விஜய்யை ரசிகர்கள் எந்தப் பெயரிட்டு அழைக்கிறார்கள்?
   ☐ தல ☐ இளைய தளபதி
2. 'திருப்பாச்சி' படத்தில் பட்டாசு பாலு வேடமேற்ற நாடக நடிகர் யார்?
   ☐ பசுபதி ☐ பொன்னம்பலம்
3. விஜய், நடிப்பைப் பாராட்டிய நடிகர் யார்?
   ☐ ராதா ரவி ☐ நிழல்கள் ரவி
4. 'மேகமாய் வந்து போகிறாய்' என்ற பாடலுக்கு விஜய், யாரோடு நடனம் ஆடுவார்?
   ☐ நண்பர் ☐ காதலி
5. அசினோடு விஜய் நடித்த படம்?
   ☐ ஆதி ☐ போக்கிரி

பெயர் : ........................................ வயது : ............

முகவரி : ........................................................................

........................................................................

செல் : .............................. இ.மெயில் : ..............................

*போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :*

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 6,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

# வட்டமேஜை



# மனத்தைத் தைத்த முள்!

நிக்கோலஸ் நூலகம் பற்றி படித்துப் பார்த்ததும், 'நகரமே காதலிக்கும் அழகி' என்பதை மாற்றி 'அகிலமே காதலிக்கும் அழகி' எனக் கூறத் தோன்றியது.

**- எஸ்.வெங்கடரமணன், சென்னை**

அமரர் கல்கியின் 'ஒற்றை ரோஜா'வுக்கு ஷ்யாமின் ஓவியங்கள் மேலும் மெருகூட்டியிருந்தன!

**- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி**

எல்லோருக்கும் புரியும்படி எளிய தமிழில், வை-ஃபியைப் பற்றிப் புரிய வைத்த 'டிஜிட்டல் கேன்மன்', சுவை குன்றாத பகுதி.

**- இராசன், திருச்சி**

கொல்லிமலையின் கொள்ளையழகு, நிறம் மாறா வர்ணனைகளுடன் சிறப்பாக அமைந்திருந்தது. காஞ்சி மகா பெரியவரின் அருள்வாக்கு எல்லா மக்களுக்கும் புண்ணியம் உணர்த்தியது.

**- சி.பூங்கோதை, சென்னை - 78**

'கருவேலம்' கதை, யதார்த்தமான நடையில் அழுத்தமாகச் சித்திரித்தது, மனத்தில் கருவேல முள் தைத்தது போலிருந்தது.

**- வசந்தா, சாலிக்கிராமம்**

பத்து ரூபாயில் ரிங்டோன் ரகசியம் ஸாரி, கிளி ஜோசியம் சொன்னதற்கு நன்றியோ நன்றி!

**- எஸ். பிரியதர்ஷினி, திருநெல்வேலி**

விறுவிறுப்பான விஜய் தொடரில் கல்கி அசத்துகிறது.

**- சாலை அகரம் கா.சங்கர், விழுப்புரம்**

திருத்தம்

கடந்த வார கல்கி (08.06.08)யில், 'மலர்களின் மந்திரமொழி' கட்டுரையில் மலர் கண்காட்சி ஜூலை - 1 என்பதை ஜூன் - 1 என்று திருத்தி வாசியுங்கள்.

**(-ஆர்)**

## ஸ்பீட் போஸ்ட்

'கருவைத் தாக்கும் சர்க்கரை' - பயனுள்ள செய்தி. டாக்டர் வி.பாலாஜிக்குப் பாராட்டுகள்.

**- த.புகழேந்தி, கூகூர்.**

கர்நாடகாவில் பெற்ற வெற்றி நாடு முழுவதும் விரிவடைய வேண்டுமெனில், பா.ஜ.க.வின் தேசிய தலைமை செய்ய வேண்டியதை உணர்த்திய தலையங்கம் அருமை.

**- ஆர்.பிரகாஷ், பொன்மலை**

முதல்வர் கருணாநிதியோடு, பல கருத்துகளில் முரண்படும் மூவர் இங்கே அவரை வாழ்த்துகிறார்கள்.

**ராமகோபாலன் (இந்து முன்னணி):** கருத்து வேறுபாடு இருப்பினும் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டு, ஒரு தலைவருக்கு வாழ்த்து சொல்வது என்பது ஒரு நல்ல கலாசாரம்தான். இந்த கலாசாரம் தமிழகத்தில் வளர வேண்டும் என்பதே என் ஆசை. அந்த வகையில், முதல்வர் கருணாநிதி அவர்கள் 200 ஆண்டுகாலம் வாழட்டும் என்று இறைவனை வேண்டுகிறேன். எனினும், இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஒன்றிரண்டு கருத்துகளைச் சொல்கிறேன்.

கருணாநிதி அவர்களை, அவரது வீட்டுக்கே சென்று வாழ்த்த வேண்டுமென்பதுதான் என் ஆசை. கீதையைப் பற்றித் தவறாகப் பேசியபோது, கீதை புத்தகத்தை அவருக்குக் கொடுப்பதற்காக அவரது வீட்டுக்கே சென்றிருந்தேன். என்னை உட்காரச் சொல்லாதது மட்டுமல்லாமல், குடிக்கத் தண்ணீர் கூடக் கொடுக்காமல் அனுப்பி விட்டார். எனவே மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம் என்ற மூதோர்களின் கருத்துப்படி, என் ஆசையை அடக்கிக் கொண்டேன்.




■ நெல்லை கண்ணன் ■ பண்ருட்டி ராமச்சந்திரன்

தமது பிறந்தநாள் செய்தியாக, சேது சமுத்திர திட்டத்தை 'சேதுராம்' என்று பெயர் மாற்றி நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லியிருக்கிறார் கருணாநிதி.

இதிலிருந்து தெரிவது என்னவென்றால், எப்படியும் ராமர் பாலத்தை இடிக்க வேண்டும் என்பதில் கருணாநிதி உறுதியாக இருக்கிறார். அவரின் நாத்திக உணர்வும், தந்திர யுத்தியும்தான் அவரது வேண்டுகோளில் வெளிப்படுகிறது. குப்பன்களுக்கும், சுப்பன்களுக்காகவும் அவர் இந்த வேண்டுகோளை வைக்கவில்லை. மாறாக, ஆயிரக்கணக்கான கோடிகளைக் கொட்டி திட்டத்தைத் தொடங்கி விட்டதால், சிக்கலிலிருந்து மீள்வதற்கு ஏதோ பேசுகிறார். ராமர் பாலம் என்பது இந்துக்களின் உணர்வோடு தொடர்பு கொண்ட விஷயம். இதில் எந்தவிதமான சமரசமும் கிடையாது. உண்மையிலேயே கருணாநிதி அவர்கள், தமது புகழ் காலாகாலத்துக்கும் நிலைத்து நிற்க விரும்பினால், ஆக்கபூர்வமான காரியங்களில் அவர் ஈடுபடட்டும்.

# கட்சிகளைக்



**நெல்லை கண்ணன்:**

சமீப காலமாக அரசியல் குறித்தோ அல்லது அரசியல் தலைவர்கள் குறித்தோ நான் எந்தக் கருத்தையும் சொல்வது கிடையாது. அந்த அளவுக்குச் சிரமம் ஏற்பட்டிருக்கிறது. இருந்தும் ஒரு விஷயம் என் மனத்தை இடிக்கிறது. பல சமயங்களில் காமராஜ், ராஜாஜி ஆகியோர் வழிகளில் நடப்பதாக

# கடந்து



கலைஞர் சொல்கிறார். அந்தத் தலைவர்கள், இவ்வளவு ஆடம்பரமாக, தடபுடலாகத் தங்கள் பிறந்தநாளைக் கொண்டாடினார்களா என்ற கேள்விக்கு, பதிலை வாசகர்களின் மனச்சாட்சிக்கே விட்டு விடுகிறேன். எனவே இந்த நிலையில் நான் சுவாசிக்கும் தமிழைப் பற்றி மட்டுமே இனி நான் பேச விரும்புகிறேன். மற்றபடி பொதுவாழ்வில் இருக்கும் கலைஞர், நீண்டநாள் வாழ்ந்து, நிறைய நல்ல காரியங்களைச் செய்து அனைத்து மக்கள் மனத்திலும் நிலையான இடத்தைப் பிடிக்க இறைவனை வேண்டுகிறேன்.

**பண்ருட்டி ராமச்சந்திரன்:**

எழுபது ஆண்டுகளாக பொது வாழ்க்கையில் இருப்பதாக கலைஞர் சொல்வார். இந்தக் காலகட்டத்தில் ஐம்பதாண்டு கால அரசியலில் பொறுப்பு வகித்திருக்கிறார். ஐந்துமுறை முதல்வராக இருந்த பெருமையும் அவருக்கிருக்கிறது. இத்தனை நெடிய பொது வாழ்க்கையில் அவர் புகழின் உச்சிக்குச் சென்றிருக்க வேண்டும். ஆனால், இன்றைக்கும் ஒட்டுமொத்த தமிழ் சமுதாயத்தின் ஒரே தலைவராக அவர் உருவாக முடியவில்லை என்பதே நிதர்சனமான உண்மை. தமிழ்நாடு வறுமையிலும், வேலையில்லாத் திண்டாட்டத்தின் பிடியிலும் சிக்கித் தவிக்கிறது. நமது இளைஞர்கள், வெளிமாநிலங்களுக்கும் அயல்நாடுகளுக்கும் பிழைக்கச் செல்லும் நிலை. இந்த நிலையில்தான் தமிழ்நாடு முதலிடம் வகிக்கிறது என்பது கவலைக்குரியது.

அவரது குடும்ப முன்னேற்றத்தைப் பார்க்கும்போது, அது எவரெஸ்ட்டாக உயர்ந்திருப்பது தெரிகிறது. ஆனால், தமிழக முன்னேற்றமோ, கடலின் ஆழத்தைப் போன்றிருக்கிறது.

கலைஞருக்கு உள்ள திறமைகளை யாரும் குறைத்து மதிப்பிட முடியாது. சாமான்ய நிலையிலிருந்து சவால்களைச் சந்தித்து, அரசியலில் உயர் இடத்தைப் பிடித்து நிலைத்து நீடிப்பது என்பது சாதாரண விஷயமல்ல. ஆனால், அவரது திறமைகள், முழு அளவு தமிழ்நாட்டுக்குப் பயன்படவில்லை என்பது அவரைப் பற்றிய என் மதிப்பீடு. எது எப்படியிருப்பினும், பெருங்காயம் இருந்த பாண்டம் போன்று, திராவிட இயக்க பகுத்தறிவு அவரிடம் ஒட்டிக்கொண்டிருப்பதால், அவருக்கு என் உளமார்ந்த பிறந்தநாள் வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

- கௌசி

# மனசெல்லாம் மண்வாசம் - 10

*'அஞ்சும் அஞ்சும் பத்துதான்*
*அவரக்காப் பிஞ்சுதான்*
*ஆயா போட்ட வெத்தல*
*பாக்கில்லாம பத்தல*
*புகையில்லாம சுத்தல*
*புரிஞ்சுக்கிட்டா தப்பில்ல!*

*ஒண்ணாங்கல்ல எடுத்துப்*
*போட்டுக்கோ - என் முத்தம்மா!*
*ஒட்டியாணம் செஞ்சுப் போட்டுக்கோ!'*

தட்டாங்கல் விளையாடிக்கொண்டே சிறுமியர் பாடும் நயமான பாடல் இது. இந்தப் பாடலின் மெட்டு மிகப் பிரபலம். இந்தச் சுகமான மெட்டின் துள்ளல் இசைத் தன்மை, பல திரைப்படப் பாடல்களில் கையாளப்பட்டிருக்கிறது. ஒன்று முதல் பத்துவரை உள்ள எண்களைக் கொண்டு கணக்குச் சொல்லிக் கொடுக்கும் இப் பாடல், சிறுமியருக்குப் பிடித்த விளை யாட்டுப் பாடல். விளையாட்டோடு பாட் டும் அவர்களின் வாழ்க்கையும் விரிந்து கொண்டே செல்கின்றன.

பொதுவாக, பள்ளிகளிலும் கல்லூரி களிலும் நடத்தப்பெறும் விழாக்களில் மாணவ மாணவியர்கள் பங்கெடுத்துக் கொள்ளும் நடன நிகழ்ச்சிகளுக்கு, மக் களிசைப் பாடல்கள்தான் மிகவும் உகந் தவையாக இருக்கின்றன. சில பள்ளி, கல் லூரிகளில் திரைப்படப் பாடல்களுக்கு அவற்றில் உள்ள ஆபாசம் கருதி தடை விதித்திருக்கும்போது, நம்முடைய பண் பாட்டுக் கூறுகளைப் பொதிந்து வைத் திருக்கும் மக்களிசைப் பாடல்கள், மாணவர் களின் நிகழ்ச்சிகளை அழகுபடுத்துகின்றன. அவற்றின் தாளக்கட்டு எவருடைய செவி களையும் வசீகரித்துவிடும். மாணவ - மாண வியர் விரும்பிப் பாடி ஆடும் ஓர் இனிமை யான பாடல்,

*'தஞ்சாவூரு உருமி மேளம்*
*தாளங்கட்டிப் பாடி வரும்*



*கும்பகோணம் பொன் கரகம்*
*குஞ்சம் வச்சி ஆடி வரும்'*

திரைப்படத் துறையில் பின்னணிப் பாடகியாக வர வேண்டும் என்கிற கனவு ஒரு பக்கம் இருந்தாலும், மக்களிசைப் பாடல்களை நோக்கி எனது பயணம் நகர்ந்துவிட்டது. நாங்கள் பிரபலமான ஜோடியாக மக்கள் மத்தியில் கருதப்பட் டோம். ஒவ்வோர் ஆண்டும் பொங்கல் திருநாள் அன்று, மக்களிசைப் பாடலின் இசைத் தொகுப்பு (ஆல்பம்) வெளியிடத் தொடங்கி இதுவரை வெற்றிகரமாக பதி னைந்து தொகுப்புகள் வெளியிட்டுள் ளோம்.

## புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி

# “கர்ப்பச் சுமையக் கொஞ்ச நேரம் தாங்கிப் பாரய்யா”

வித்யாசாகரில் துவங்கி, இளையராஜா வழியாகத் திரையில் பல வாசல்கள் திறந்தன.

ஒரு வகையில் திரைப்படப் பாடல்களிலும் புகழ் பெற்றிருந்தாலும், கச்சேரி மேடைகளில் எங்களிடம் அந்தப் பாடல்களைக் கேட்பதில்லை. மக்களிசைப் பாடல்களைத்தான் மக்கள் விரும்பிக் கேட்கிறார்கள். சமுதாயக் கருத்துள்ள பாடல்களை நிறைய கேட்கிறார்கள். எங்களுக்கென்று ஒரு தனித்துவம் வளர்ந்துள்ளதே இதற்குக் காரணம். நம் சமூகத்தில் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் மக்களிசை கலந்திருப்பதால், அவர்களுடைய உணர்வுகள் வெளிப்படுவதால் பெரிதும் விரும்பப்படுகிறது.

பெண்ணுரிமையைப் பறைசாற்றும் ஓர் இசைத் தொகுப்புக்கு, நான் பல பாடல்கள் பாடியிருக்கிறேன். ஆண்களேகூட அதிகம் படிக்காத ஒரு குடும்பப் பின்னணியிலிருந்து இசைத்துறையில் முன்னேறி வந்த எனக்கு, அந்தப் பாடல்களின் வலிமை என்னவென்று புரிந்துகொள்ள முடிகிறது.

*'பொம்பளன்னாலே உனக்குக் கிள்ளுக்*
*கீரையா - தாங்க*
*பொறுத்துப் பொறுத்துப்*
*போறதுனாலே அடிக்க வாரியா*
*கர்ப்பச் சுமையக் கொஞ்ச நேரம்*
*தாங்கிப் பாரய்யா - சும்மா*
*கை வலிக்கப் பாத்திரத்தை வெளக்கிப்*
*பாரய்யா!*

எத்தனை விஞ்ஞான வளர்ச்சி அடைந்தாலும், பெண்ணின் இடத்தை அவளுக்கான ஆதார மையத்தை யாரால் நிரப்ப முடியும்? கர்ப்பச் சுமையை எந்த ஆண் எந்த யுகத்தில் கொஞ்ச நேரம் தாங்கிக் கொள்ள முடியும்? அந்தப் பாரம் அவளுக்கு மட்டுமேயானதுதானே? இதை எப்படி இந்தக் கிராமவாசி வாழ்க்கை தத்துவ வரிகளாக மாற்றியுள்ளான், ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

**(அடுத்த வாரம் புஷ்பவனம் குப்புசாமி)**

எழுத்தாக்கம்: **சிவன்**



## வாசகர்களே!

◆ செவி வழி செய்தியாய் பல தலைமுறை கடந்து கதையாகி கடவுளாக மாறிய மூதாதையர்கள்

◆ தன்னையே தியாகம் செய்து குடும்ப தெய்வ அந்தஸ்து அடைந்தவர்கள்

◆ காவலாயிருந்து இறைத்தன்மை பெற்ற வீரர்கள்

◆ அமானுஷ்யமாய் இன்னும் உலவிக்கொண்டு அன்புடன் காத்தும், தண்டித்தும் வலம் வருவதாய் சொல்லப்படும் உங்கள் குலதெய்வங்களைப் பற்றிய அனுபவங்களை, வழிபாட்டு முறைகளை, அவற்றின் ஆதி கதைகளை புகைப்படத்தோடு அனுப்புங்கள்.



# குற்றச்சாட்டு சரியா?

"ஜெயலலிதாவுக்குப் பொருளாதாரமும் புரியவில்லை; நடைமுறையும் தெரியவில்லை. அரசுக்கு அவப்பெயர் உண்டாக்கும் ஒரே எண்ணத்தில் அவருடைய குற்றச்சாட்டு அமைந்திருக்கிறது'' என்று ஊதித் தள்ளிவிட்டார் சிதம்பரம்!

அயல்நாடுகளிலிருந்து வந்து இந்தியாவில் முதலீடாகும் பணம் இரு விதங்களில் வருகிறது :

ஒன்று, தொழிலகங்களில் முதலீடு. இதன் மூலம் நமது நாட்டில் வேலை வாய்ப்புகள் பெருகும்; உற்பத்தி அதிகரிக்கும்; வருமானம் கிடைக்கும். எனவே இத்தகைய முதலீடுகள் வரவேற்கத்தக்கன.

இரண்டாவது, பங்கு மார்க்கெட்டில் முதலீடு. இதில் அயல்தேச தனி நபர்கள் தவிர, அயல்நாட்டு மியூச்சுவல் ஃபண்ட் நிறுவனங்களும் லாபம் கருதி முதலீடு செய்கின்றன.

இரண்டு வகை முதலீடுகளுக்கும் இடையில் முக்கிய வித்தியாசம் உண்டு.

இரண்டாவது வகை முதலீட்டில் எப்போது வேண்டுமானாலும் பங்குகளை விற்று, பணத்தைத் திரும்ப எடுத்துச் சென்று விடமுடியும். இவ்வாறு நமது நாட்டு பங்குமார்க்கெட்டில் முதலீடாகும் அயல்நாட்டுப் பணம், ரூபாய் மதிப்பில் மூன்று லட்சம் கோடி என்று கணிக்கப்பட்டுள்ளது. இவை இன்று வரும், நாளை போய்விடும் என்பதால், பங்கு மார்க்கெட்டில் அடிக்கடி அதிர்ச்சிகளை உருவாக்குகின்றன. தவிர, இந்த மூன்று லட்சம் கோடி ரூபாய், பணப் புழக்கத்துக்கும் பணவீக்கத்துக்கும் விலைவாசி உயர்வுக்கும் ஒரு முக்கிய காரணமாகிறது.

சமீப காலமாக பல அயல்நாட்டு மியூச்சுவல் ஃபண்ட் நிறுவனங்கள் தங்களுக்குப் பணம் எங்கிருந்து வருகிறது என்ற விவரத்தை முழுமையாக வெளியிடுவதில்லை. தங்கள் கூட்டாளிகளுக்கு இவை பங்கேற்ற சான்றிதழ்கள் வழங்கி பணம் பெறுகின்றன. அந்தப் பணத்தை இந்திய பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்கின்றன. இதற்கு கமிஷனும் பெறுகின்றன. அந்தக் கூட்டாளிகள் யார் என்ற விவரம் தெரிய வருவதில்லை. இவ்வாறு 'பங்கேற்ற சான்றிதழ்' வழங்கி பெறப்படும் பணம், கறுப்புப் பணமாகக் கருதப்படுகிறது. இந்தப் பணம் நிச்சயம் தவறான காரியங்களுக்கே பயனாகும்.

இதைத் தடுப்பதற்கு, SEBI என்ற அரசு பாதுகாப்பு அமைப்பு தக்க விதிமுறைகளை உள்ளடக்கியிருக்கிறது என்றும் கவனமாகப் பரிசீலிக்கிறது என்றும் சிதம்பரம் கூறுகிறார். என்றாலும் மூன்று லட்சம் கோடி ரூபாய் முதலீடாகும்போது, அதுவும் இன்று போய் நாளை திரும்பவும் வரும் முதலீட்டுச் சூழ்நிலையில் எவ்வாறு SEBI, எந்த அளவுக்கு உன்னிப்பாகப் பரிசீலிக்க முடியும் என்ற பெரிய கேள்வி எழத்தான் செய்கிறது.

– **வி.கோபாலன்**

'மொழி' மூலம் தமிழ் சினிமாவைப் புரட்டிப் போட்ட இயக்குநர் ராதாமோகன், ரொம்பவும் அளந்து அளந்துதான் பேசுகிறார். அவருடனான ஷார்ட் அண்ட் ஸ்வீட் சந்திப்பிலிருந்து...



# "ரசிகனை ரசிக்கணும்..."



"சினிமாங்கறது ஒரு பொழுதுபோக்கு மீடியம். அதுல யதார்த்தத்தைக் குழைச்சு வாழ்க்கைக்குத் தேவையான ஏதாவது ஒரு விஷயத்தைச் சொல்றதுதான் என் பாணி. என்னைப் பாதித்த மனிதர்கள், சம்பவங்களைத்தான் என் கதைக்கான ஆதார கருதியா எடுத்துக்கறேன். எங்கிருந்து வேணா கதைக்கரு கிடைக்கலாம். தூங்கும்போது வெளிப்படற கனவிலிருந்தும் கிடைக்கலாம்; தூக்கத்துக்கு முன்னாடி கேக்கற பாடல் வரியிலேர்ந்தும் கிடைக்கலாம்.

செலக்ட் பண்ற அந்தக் கதைக்கு ஒரு இயக்குநர் உண்மையா இருந்தா போதும், நல்ல படத்தை எடுத்துடலாம். அந்தக் கதை எதைக் கேக்குது, என்ன தேவைப்படுது, டிராவலிங் எப்படின்னு யோசிக்க யோசிக்க அழகான ஒரு திரைக்கதை உதயமாகுது. அதுக்குப் பொருத்தமா நடிகர்கள் கிடைக்க, அவங்க

பிரமாதமான ஒரு நடிப்பை வெளிப்படுத்த, டெக்னாலஜி எல்லாம் ஒண்ணு சேர, ரெண்டரை மணி நேரப் படமா திரையில பார்க்கப்படுது. எந்தக் கோணத்துலேர்ந்து ரசிகன் பார்த்தாலும், ஏதாச்சும் ஒரு விஷயம் அவனைக் கவரணும். அப்பத்தான் அது ஒட்டு மொத்த வெற்றியாகுது. ஸ்க்ரிப்ட்ல எழுதினதைவிட படமாக்கும்போது பெட்டரா இருக்கணும். அதுதான் ஒரு இயக்குநரோட ஆகப் பெரிய சாதனையா நான் சொல்வேன். ஒவ்வொரு காட்சிக்கும் மெனக்கெடணும். ரசிகனோட மனநிலைல தள்ளி நின்னு, பார்த்து ரசிக்கக் கத்துக்கணும். மல்லிகைச் சரத்துலேர்ந்து பூக்களை உதிர்த்தா ஒவ்வொரு பூவுமே தனித்தனி வாசனையைத் தந்தே தீரும். அப்படி ஒவ்வொரு காட்சியையும் மணக்க மணக்க எடுக்கணும். அப்படியே கோத்துப் பாருங்க... மல்லிகைச் சரமா பூத்துக் குலுங்கும் திரைக்கதை.

மென்மையான கதைகளையே நான் தொடறதுக்குத் தனிப்பட்ட காரணம் எதுவும் இல்ல. சொல்ல முடியாது. நாளைக்கே படு பயங்கர ஆக்ஷன் சப்ஜெக்ட்கூட என்னால் எடுக்கப்படலாம். தெரியல. ஆனா இப்போதைக்கு 'அபியும் நானும்' மட்டும்தான் என் டார்கெட். அப்பாவுக்கும் மகளுக்குமான உலகத்தை, எத்தனைபேர் இங்க நெருக்கமா உணர்ந்திருக்கோம், அணு அணுவா அதை அலசியிருக்கோம்? ரசிச்சு ரசிச்சு ஒரு கவிதை மாதிரி இந்தப் படத்தை எடுத்திருக்கோம். ஒரு குழந்தை பிறக்கும்போது ஒரு அப்பனும் பிறக்கறான். அது வளரும்போது கூடவே அவனும் வளர்றான். நம்மகிட்டருந்து



மல்லிகைச் சரத்துலேர்ந்து பூக்களை உதிர்த்தா ஒவ்வொரு பூவுமே தனித்தனி வாசனையைத் தந்தே தீரும். அப்படி ஒவ்வொரு காட்சியையும் மணக்க மணக்க எடுக்கணும்

குழந்தை கத்துக்கப் போக, குழந்தைகிட்டருந்து நாம கத்துக்க எத்தனை விஷயங்கள் இருக்கு தெரியுமா? ஒரே குடும்பமா இருந்தாலும் ஒவ்வொருத்தருக்கும் ஒரு உலகம் இருக்கு. அதுல அவங்க சுதந்திரமா இருக்க விரும்புவாங்க. இருக்கவும் விடணும். இப்படிப் பல விஷயங்கள் கலந்த கலவையை 'மொழி' மாதிரி அழகியலோடு தந்திருக்கோம். எனக்கு எல்லாமே ஆன பிரகாஷ், அப்பா கேரக்டர்ல வாழ்ந்திருக்கான். த்ரிஷா தான் பொண்ணு. ' 'கில்லி'யில ஜோடி மாதிரி நடிச்சுட்டு என்ன இது கூத்து'ன்னு கேப்பீங்க. இந்த மாதிரி அவநம்பிக்கைல எல்லாம் எனக்கு உடன்பாடு இல்ல. சினிமாக்காரங்க மட்டும்தான் இப்படிப் பேசுவாங்க. ரசிகன், நல்லா இருந்தா ரசிச்சுட்டு கைதட்டிட்டுப் போவான்.

கதைக்கேத்த நடிகர்களைத்தான் ஒவ்வொரு முறையும் தேடி ஓடறேன். எப்பவும் நடிகர்களுக்கான கதை பண்ண எனக்கு விருப்பமில்ல. நாளைக்கே என் கதைக்கு பெரிய நடிகர்கள் தேவைப்பட்டா, சேர்ந்து படம் பண்ணுவேன். அந்தச் சந்தோஷம் தர்ற பேரானந்தத்துல பூக்கற படங்கள், 'அழகிய தீயே' மாதிரியும் 'மொழி' மாதிரியும் இருக்கறதுல ஆச்சரியமில்ல. ரொம்பக் குறைச்சலா பண்ணாலும் நிறைவான படங்கள் பண்ணியிருக்கேன். அந்த நிறைவுதான் என்னை அடுத்த கட்டம் நோக்கி கைபிடிச்சு அழைச் சிட்டுப் போகுது. அபிக்குப் பிறகு இந்திக்குப் போறேன். 'மொழி' எல்லைகளைக் கடந்தும் பேசும்!''

– ஆல்ஃபர்டோ

படங்கள்: பொள்ளாச்சி சுந்தரம்

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.